TA—F-1

# தாய்மார்களே!
# போலியோவை ஒழிக்க
# உங்களால்தான் முடியும்.




## டிசம்பர் 9 மற்றும் ஜனவரி 20 தேதிகள் தேசிய போலியோ தடுப்பு தினங்களாக அறிவிக்கப்பட்டுள்ளது.

நீங்கள், ஏற்கனவே உங்கள் குழந்தைக்கு சொட்டு மருந்து போட்டிருந்தாலும், தற்போது குழந்தைக்கு சுகவீனம் அல்லது பேதி போன்ற வியாதிகள் கண்டு உடல் நலம் பாதிக்கப்பட்டு இருந்தாலும், பாதுகாப்பு நலன் கருதி மீண்டும் ஒரு முறை உங்கள் அருகில் உள்ள போலியோ தடுப்பு முகாம்களில் டிசம்பர் 9, ஜனவரி 20 தேதிகளில் ஐந்து வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு சொட்டு மருந்து தவறாமல் போடுங்கள்.

**ஆரோக்கியமான குழந்தைகளின் எதிர்காலம் நம் நாட்டின் எதிர் காலம்.**

**கி.பி. 2000-த்தில் போலியோ இல்லாத இந்தியாவை உருவாக்குவதில் மகிழ்ச்சியுடன் பங்கேற்போம்.**



**PolioPlus**



## டிசம்பர் 9, 1995
## ஜனவரி 20, 1996

தேதிகளை
குறித்துக்
கொள்ளுங்கள்.
அவை உங்கள்
குழந்தைகளைப்
பாதுகாக்கும் நாட்கள்.




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி

## அடுத்த நூற்றாண்டில் அடிவைக்குமுன்...

**நா**ம் புத்தாண்டை விட புதிய நூற்றாண்டு பற்றிச் சிந்திப் போம். இன்னும் நான்கு வருடங்களுக்குப் பின் இந்த இருப தாவது நூற்றாண்டு கழிந்து விடும். இருபத்தோறாவது நூற்றாண்டு ஆரம்பமாகும். வரப்போகும் நூற்றாண்டில் மக்கள் பல எதிர்பார்ப்புகளை உற்சாகத்துடன் எதிர்பார்க் கிறார்கள்.

இருபதாவது நூற்றாண்டு பல நாடுகள் கலந்து கொண்ட இரு உலகப் போர்களைப் பார்த்து விட்டது. நம் நாடும் வெளிநாடுகளுக்குப் போய் இப்போர்களில் கலந்து கொண் டது. ஆங்கிலேயர்களுக்காக நம் வீரர்கள் போரிட்டுப் பலர் மடிந்தும் போயினர்.

நம் நாட்டினுள் சுதந்திரப் போராட்ட வீரர்கள் ஆங்கிலே யரை எதிர்த்து மகாத்மா காந்தியின் தலைமையில் சுதந்திரப் போரை நடத்தினார்கள். நம் நாடு எவ்வாறு சுதந்திரம் பெற்றது என்பதை யாவரும் நன்கு அறிவார்கள்.

சுதந்திரம் நமக்கு ஐம்பது ஆண்டுகளுக்கு முன் கிடைத்து மக்கள் ஜனநாயக முறையை ஏற்றனர். நம் நாடு மிகப் பெரிய ஜனநாயக நாடாகவும் கருதப்படுகிறது. ஆயி னும் மூன்றில் ஒரு பங்கு மக்கள் வறுமைக் கோட்டிற்குக் கீழேதான் இருக்கிறார்கள். பாதிக்கு மேல் எழுதப் படிக்கத் தெரியாதவர்கள்.

இந்த நூற்றாண்டு முடிவதற்குள் ஏழ்மையையும் எழுத் தறியாமையையும் கணிசமாகக் குறைப்போம் என்று இந்தப் புத்தாண்டின் தொடக்கத்தில் உறுதி பூணுவோம்.





மதிமுகம்: 98 ஜனவரி 1996 புன்னகை: 1

தனிப்பிரதி: ரூ.5.00 வருட சந்தா: ரூ.60.00



# ஐக்கிய நாடுகள் சபையின் பொன் விழா

ஐக்கிய நாடுகளின் தலைமை அலுவலகம் நியூ யார்க்கில் உள்ளது. அங்கு சென்ற அக்டோபரில் ஐ.நா. சபை தன் பொன் விழாக் கொண்டாட்டங் களை மூன்று நாட்கள் நடத்தியது. இதன் ஐம்ப தாவது ஆண்டு விழாவில் உலகின் பல நாட்டு அரசுகளின் அதிபர்களும், பிரதம மந்திரிகளும் ஆட்சிப் பிரமுகர்களும் கலந்து கொண்டார்கள்.

அக்டோபர் 22ல் அமெரிக்க அதிபர் க்ளின் டன், ரஷ்ய அதிபர் போரிஸ் எல்ஸ்டின், க்யூபா அதிபர் ஃபீடல் கேஸ்ட்ரோ, பாலஸ்தீன அதிபர் யாசர் அராஃபத் ஆகியோர் சொற்பொழிவு ஆற்றினார்கள். 23ந் தேதி பிரெஞ்சு அதிபர் ஜாக் சிராக், பிரிட்டிஷ் பிரதமர் ஜான் மேஜர், ஆகி யோர் பேசினார்கள். நம் பிரதம மந்திரி ஸ்ரீ பி.வி. நரசிம்மராவ் மூன்றாவது நாள் சொற்பொழிவு புரிந்தார். பொது சபையில் பேசிய 185 உலகத் தலைவர்கள் ஒவ்வொருவருக்கும் ஐந்து நிமிடங் கள் மட்டுமே அளிக்கப்பட்டன.

முதலாவது உலகப் போர் (1914-18) நடந்து முடிந்த போது அப்போதைய உலகத் தலைவர் கள் ஒன்று கூடி உலக நாடுகள் கூட்டமைப்பை (லீக் ஆஃப் நேஷன்ஸ்) ஏற்படுத்தி உலகில் சமா தானம் நிலவுமென எதிர்பார்த்தார்கள். ஆனால் அந்த அமைப்பின் முயற்சிக்குப் பலன் கிட்ட வில்லை. 1939ல் இரண்டாவது உலகப் போர் ஆரம்பமாகியது.

ஆறாண்டு காலம் நடந்த இப்போர் பல லட் சம் மனிதர்களை பலி கொண்டது. இப்படிப்பட்ட பயங்கர நிலை மீண்டும் உருவாகாதிருக்கவும் பிற்கால மக்களைக் காக்கவும் 1945 ஜுன் 26ல் ஐக்கிய நாடுகள் சபை அமைக்கப்பட்டது. சான் பிரான்சிஸ்கோவில் ஐம்பது நாடுகளின் தலைவர் கள் கூடி ஐ.நா. பிரகடனத்தில் கையொப்பமிட் டார்கள். இவ்வாறு கையெழுத் திட்ட நாடுகளில் நம் நாடும் ஒன்றாகும். ஸ்வீடன் நாட்டு ட்ரிக்வீலி இதன் பொதுச் செயலராக ஆனார்.

உலகில் ஆங்காங்கு போர் நிகழும் அபாயம் ஏற்பட்ட போது குறிப்பாக வியட்நாம். கம் போடியா, கொரியா, யூகோஸ்லாவியா, பாலஸ் தீனம், பாரசீக வளை குடா பகுதிகளில் ஏற்பட்ட போர் அபாயங்களை பெரும் அளவில் தடுத்து ஐ.நா. அமைப்பு தன் நோக்கத்தில் ஓரளவு வெற்றியும் கடந்த ஐம்பது ஆண்டுகளில் கண்டுள்ளது.

அரசியல் துறையில் மட்டுமல்லாமல் ஐ.நா. பல்வேறு துறைகளின் பிரச்னைகளையும் தீர்த்து வருகிறது. இதற்காக உலகக் குழந்தைகள் நிதி (யூனி செஃப்) கல்வி, விஞ்ஞான, கலாச்சார அமைப்பு (யுனெஸ்கோ) உலக உடல் நல அமைப்பு, உலகத் தொழிலாளர் அமைப்பு, உலக நீதி மன்றம் முதலியவற்றை அமைத்து அத்துறை களில் எதிர் நோக்கும் பிரச்னைகளைத் தீர்த்தும் வருகிறது.

ஐ.நா வின் இரண்டாவது பொதுச்செயலராக இருந்த ஹேமர் ஷல்ட் "ஐ.நா நம்மை சொர்க்க சுகத்தில் ஆழ்த்துவதற்காக அல்ல, நரக வாழ்வி லிருந்து மீட்கவே" என்றார். இப்போதைய பொதுச் செயலர் புட்ரோஸ்காலி பொன் விழா விற்கு வந்தவர்களிடம் "உங்களை உங்களது இல்லத்தில் வர வேற்கிறேன். உலக அமைதிக் காகப் பாடுபடும் இந்த மேடைக்கு வரும்படி அழைக்கிறேன்" என்று கூறினார்.

ஐக்கிய நாடுகள் அமைப்பு இவ்வளவு உயரிய நோக்குடன் ஒளி மயமான பாதையில் பீடு நடை போட இளம் தலைமுறையினரின் தலைவர்களும் முன் வந்து முயல வேண் டும்.






# புலியால் புதுமணம்

ரத்தினபுரியை ரத்தினசேனன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனுக்கு வேட்டையில் மிகுந்த விருப்பம் இருந்தது. அதனால் வாரத்திற்கு ஒருமுறையாவது காட்டில் போய் வேட்டையாடி விட்டு வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தான்.

ஒருமுறை தன் பரிவாரங்களோடு காட்டிற்கு வேட்டையாட அவன் சென்றான். அவன் சில மிருகங்களை வேட்டையாடி விட்டு ஒரு மரத் தடியே தங்கினான். ஓரிரு நிமிடங் களுக்குப் பின் அந்த மரத்திலிருந்து சற்று தூரத்தில் ஒரு புதரில் ஏதோ சந்தடி ஏற்பட்டது. அவன் என்ன வென்று திரும்பிப் பார்ப்பதற்குள் ஒரு புலி அவனை நோக்கிப் பாய வந்தது.

ரத்தினசேனன் சட்டெனத் தன் கேடயத்தால் தன்மீது பாய வந்த புலி யைத் தடுத்துத் தள்ளினான். அது எழுந்து மீண்டும் தாக்க வருவதற்குள் அவன் தன் இடைவாளை உருவிக் கொண்டு அதன் கழுத்தை ஒரே வெட் டில் வெட்டினான். அது பலமாக அலறிக் கத்தியவாறே சுருண்டு விழுந்து இறந்தது.

இதைக் கண்டு மன்னனோடு வந்த வீரர்கள் அவனது துணிச்சலை தம் மன திற்குள்ளேயே பாராட்டிக் கொண் டார்கள். அவர்கள் ரத்த வெள்ளத்தில் கிடக்கும் புலியைப் பார்க்க அதை சுற்றி நின்றார்கள். அப்போது புதரில் மீண்டும் சலசலப்பு ஏற்பட்டது.

ரத்தினசேனன் கையில் பிடித் திருந்த வாளுடன் அப்புதரருகே சென் றான். அப்போது ஒரு புலிக் குட்டி அங்கிருந்து ஓடி வந்து ஒரு வீரனின் மீது விழுந்து அவனைப் பிராண்டி யது. அது பிறந்து ஒரு மாதம் கூட ஆகி இருக்காது என்றே யாவருக்கும் தோன்றியது.

—சிவனார் செல்வன்—

புலிக்குட்டி கீழே இறந்து கிடக்கும் புலியைச் சுற்றி சுற்றி வந்து முனக லாயிற்று. இதைக் கண்டு ரத்தின சேனனின் மனம் இளகி விட்டது. அவன் மெதுவாகப் போய் அதைப் பிடித்துத் தன் கையில் எடுத்துக் கொண்டு தடவிக் கொடுத்தான். அது வும் அவன் கையைப் பரிவுடன் நக்கி யது.

அவன் அப்புலிக் குட்டியிடம் ''கோபப்படாதே. என்னைக் காத்துக் கொள்ளத்தான் உன் தாயைக் கொல்ல நேர்ந்தது'' என்று கூறினான். பிறகு அவன் வேட்டையை முடித்துக் கொண்டு புலிக் குட்டியுடன் அரண் மனைக்குச் சென்றான். அங்கு தன் மனைவி ரமாதேவியிடம் அப்புலிக் குட்டியைக் காட்டவே, அவளும் ''இது புலிக் குட்டி. என்னதான் இதற் குப் பால் கொடுத்து வளர்த்து வந்தா லும் இதன் இயற்கையான புலிக் குணம் போய்விடாது. இது வளர்ந்து பெரிய புலியானால் நம்மையே அடித் துக் கொன்று விடுமே. இதை அரண் மனையில் வளர்ப்பது பற்றி நன்கு யோசித்து முடிவு செய்யுங்கள்'' என் றாள்.

அப்போது ரத்திசேனன் பெருமூச்சு விட்டு காட்டில் நடந்ததை அவளிடம் விவரமாகக் கூறி ''இது தன் தாயை இழந்து கத்திக் கொண்டிருந்தது பரி தாபமாக இருந்தது. அதனால் இதனை எடுத்து வந்தேன். இதனை இப்போது முதலே நாம் இங்கு வளர்த்து வந்தால்



இதன் கொடிய குணம் போய்விடும் என்று நான் நினைக்கிறேன். ஒரு வேளை பெரிதானதும் காட்டுப்புலி போலக் கொடியதாக இருந்தால் இதனைக் காட்டில் கொண்டு போய் விட்டு விடலாம்'' என்றான்.

அன்று முதல் மூன்று வேளைகளி லும் ரத்தினசேனனே அந்தப் புலிக் குட்டிக்கு பாலை வைத்து குடிக்கச் செய்து வந்தான். ஒரு மாதகாலத்தில் அது எல்லோரிடமும் நன்கு பழகி விட்டது. பூனைக் குட்டி போல அந்தப்புரம் முழுவதும் திரிந்து வந் தது. ராணியின் மடியில் படுத்துத் தூங்கி வந்தது. ஒரு வருடம் கழியவே அது நன்கு வளர்ந்து பெரிய புலியாக ஆகியது.



புலிக்குட்டியாக இருந்து புலியான தும் அது மாமிச உணவை உண்டு வந்தது. ஆனால் அது அந்தப்புரத்தி லுள்ள மனிதர்களுக்கோ, பிராணி களுக்கோ எவ்விதத் தீங்கும் இழைக்க வில்லை. அது ஒரு வளர்ப்பு வீட்டு மிருகம் போலச் சாதுவாக இருந்து வந்தது.

இப்படி இருக்கையில் திடீரென அந்தப் புலியின் முதுகில் ஒரு கட்டி தோன்றியது. அது ஒரு வாரத்தில் பெரி தாய் வீங்கி விடவே மிருக வைத்தி யரை அழைத்துவந்து காட்டினார்கள். அவரும் அதனைப் பரீட்சித்துப் பார்த்து விட்டு மன்னனிடம் ''அரசே இது புலிக்கு வரும் அபூர்வ ராஜ பிளவை. சாதாரண மருந்துகளால் இதை குணப்படுத்த முடியாது. இதை குணப்படுத்த ஒரு களிம்பை பனி ரெண்டு மூலிகைகள் கொண்டு தயா ரிக்க வேண்டும். பதினோறு மூலிகை கள் என்னிடம் உள்ளன. சிந்தூர சுதா மலர் என்பதுதான் பனிரெண்டாவது. அது மூன்றடி உயரச் செடியில் வருடத் திற்கு ஒருமுறை தான் மலர்வது. அது வேறு எங்கும் கிடைக்காது மரகதபுரி மன்னன் மாணிக்கசேனனின் பூங்கா வில் இருக்கிறது'' என்றார்.

மாணிக்கசேனனின் பெயரைக் கேட்டதும் ரத்தினசேனனுக்குக் கோபம் வந்துவிட்டது. இருபது வருடங்களுக்கு முன் நடந்த சம்பவம் அவனுக்கு நினைவிற்கு வந்தது.

கனகபுரி இளவரசி காஞ்சனாவின் சுயம்வரத்திற்கு எல்லா அரசகுமாரர் களும் அழைக்கப்பட்டிருந்தனர். அப் போது ரத்தினசேனன் இளைஞன். அவன் சுயம்வரத்திற்குப் போயிருந் தான். சுயம்வரத்தின் போது அவன் மரகதபுரி இளவரசன் மாணிக்க சேனனின் அருகில்தான் உட்கார்ந்தி ருந்தான்.

காஞ்சனா கையில் மாலையுடன் வந்தவள் எந்த இளவரசனையும் பாரா மல் நேராக மாணிக்கசேனன் அமர்ந் திருந்த இடத்திற்குப் போய் அவன் கழுத்தில் மாலையைப் போட்டாள். அப்போது அவன் ரத்தினசேனனை ஏதோ போரில் வென்று விட்டவன் போலப் பார்த்து மீசையை முறுக்கிக் கொண்டு சிரித்தான்.

ரத்தினசேனனுக்கு ஆத்திரமும் கோபமும் வந்துவிட்டது. அவன் உடனே மாணிக்கசேனனைப் பார்த்து ''அற்பனே! ஒரு பெண் உன் கழுத்தில் மாலையைப் போட்டு விட்டால் நீ வீராதி வீரன் ஆகிவிட்டாய் என்பதல்ல. சுத்த வீரனின் லட்சணம் அவன் பிறருடன் போர் புரிந்து தானே சிறந்தவன் என்று நிரூபிக்க வேண்டும். நீ இப்போது என்னுடன் வாட்போர் புரிவதற்குத் தயாரா?'' என்று சவால் விட்டான். மாணிக்கசேனனும் வாளை உருவிக் கொண்டு ''இதோ பார். வெறும் வாட்போர் புரிவதால் என்ன பயன்? உன் நாட்டிற்கும் என் நாட்டிற்கும் முத்துக் கோட்டம் என்ற பகுதி பற்றிய தகராறு நிலவி வருகிறது. இந்த வாட்போரில் நான் வெற்றி பெற்றால் அது என் நாட்டிற்குச் சொந்தம் என்றும் நீ வெற்றி பெற்றால் அதை நீ உன் நாட்டோடு சேர்த்துக் கொள்ளலாம் என்று பந்தயம் வைத்துக் கொள்வோம். இதற்குச் சம்மதிக்கிறாயா?'' என்று கேட்டான்.

ரத்தினசேனனும் சம்மதிக்கவே சுயம்வர மண்டபம் அப்போதே வாட்போர் மேடையாக மாறியது. ரத்தின சேனனுக்குத் தன்னை யாராலும் வாட்போரில் வென்றுவிட முடியாது என்ற உறுதியான நம்பிக்கை இருந்தது. எனவே வாளை உருவிக் கொண்டு மாணிக்கசேனனை எதிர்க்க நின்றான்.

போட்டி ஆரம்பமாகியது. இருவரும் ஒருவருக்கு மற்றவர் சளைத்தவர் அல்ல. தாக்குதல் வெகு நேரத்திற்கு நடந்து கொண்டிருந்தது. மாணிக்கவர்மன் களைத்துப் போய் விட்டான். அவன் தோற்றுப் போய் விடுவான் என்ற நிலையும் ஏற்பட்டு விட்டது. அப்போது ரத்தினசேனன் தன் வலது கையிலிருந்த வாளால் மாணிக்கசேனனை பலமாகத் தாக்க ஒரு வீச்சு வீசினான்.



ஆனால் மாணிக்கசேனன் அதிலிருந்து தப்பச் சட்டென விலகி விட்டான். அதனால் ரத்தினசேனனின் வலது கைவாள் அவனது இடது கையில் பலமாகப்பட்டு பலத்த காயத்தை ஏற்படுத்தியது. ரத்தின சேனன் வலிபொறுக்க முடியாமல் தன் வாளை நழுவ விட்டான். இவ்



வாறு ரத்தினசேனன் தன்னைத் தாக்கிக் கொண்டு அந்தப் போட்டியில் தோற்றுப் போனான். இது எதிரியின் சாமர்த்தியத்தால் அல்ல, தன் துரதிர்ஷ்டத்தால்தான் என்று அவன் மனம் தேறினாலும் ஒப்பந்தப்படி தோல்வியை ஒப்புக்கொண்டு முத்துக் கோட்டத்தை மாணிக்கசேனனுக்குக் கொடுத்து விட்டு அவமானத்துடன் ரத்தினபுரிக்குத் திரும்பினான். அன்று முதல் மாணிக்கசேனனைத் தன் ஜென்ம விரோதியாகக் கருதி வந்தான்.

தன் கணவனின் மன நிலையைப் புரிந்து கொண்ட ரமாதேவி ''இது பகைமையையும் பிடிவாதத்தையும் காட்டும் நேரமல்ல. எப்படியாவது மாணிக்கசேனனின் பூங்காவிலுள்ள சிந்தூர சுதாமலரைக் கொண்டுவந்து புலியைக் காப்பாற்றியே தீர வேண்டும்'' என்றான்.

ரத்தினசேனனும் ''அப்படியானால் மரகதபுரி மீது படை எடுத்துப் போய் அதைக் கொண்டுவர வேண்டியதுதான்'' என்றான். அப்போது ரமாதேவி ''நன்றாக யோசித்துப் பாருங்கள். அந்த மலருக்காக ஒரு நாட்டுடன் போர் புரிவது சரியா? நீங்கள் போர் புரிந்து அதை அடைய முடியும் என்பது என்ன நிச்சயம்? மாணிக்கசேனன் அந்த செடியையே அழித்து விட்டால் என்ன ஆகும்? இதில் உங்கள் பெயர் தான் கெடும்'' என்றாள்.

ரத்தினசேனனும் ''சரி. அப்படியானால் புலியை எப்படிக் காப்பாற்றுவது?'' என்று கேட்கவே, ரமாதேவியும் ''நான் சொல்வதைச் சற்று பொறுமையுடன் கேளுங்கள். நம் மகனும் மாணிச்சசேனன் மகள் மஞ்சுளாவும் ஒருவரையொருவர் விரும்புகிறார்கள். அவர்களது திருமணம் நடந்தால் பிரச்னை தீரும்'' என்றாள்.

ரத்தினசேனனோ ''என் பகைவனின் மகளைப் என் மருமகளாக நான் ஏற்பதா! முடியாது'' எனக் கத்தவே ரமாதேவியும் அமைதியுடன் ''பாருங்கள்! காட்டின் புலிக்குட்டி மனிதர்களிடையே வளர்ந்து தன் வெறியையும் கொடூர குணத்தையும் விட்டு விட்டது. மனிதர்களாகிய நாம் கோபத்தையும் பகைமையையும் விட்டுவிட முடியாதா? இன்னமும்

மாணிக்கவர்சேனனின் மீது ஏன் வெறுப்பு? இதே புலி நீங்கள் அதன் தாயைக் கொன்று விட்டீர்கள் என்ப தற்காக உங்கள் மீது வெறுப்பு கொண்டுள்ளதா? இல்லையே. உங் களிடம்அன்புடன்தானேபழகுகிறது. ஒரு கொடூர குண மிருகமே முற்றி லும் மாறும்போது மனிதன்தன் கோப தாபங்களை விட்டுவிட்டு பகை மையை மறந்து அன்புடன் எல்லோ ரிடமும் பழகக் கூடாதா?'' என்று கூறினாள்.

ரத்தினசேனனும் ரமாதேவி கூறி யதை கேட்டு சற்று யோசித்து ''ஆமாம். நீ கூறுவது சரிதான்'' மாணிக்கசேனனுக்கு நம்முடன் சம் மந்தம் செய்து கொள்ள ஆட்சேபணை இல்லையென்றால் எனக்கும் இத் திருமணத்தில் சம்மதமே. ஆனால் முதலில் நாம் மரகதபுரியிலிருந்து அந்த மலரைக் கொண்டு வந்தால் தானே நம் புலியைக் காப்பாற்ற முடியும்?'' என்றான்.

அப்போது அங்கு வந்த மிருக வைத்தியர் மன்னனை வணங்கி ''அரசே! என்னை மன்னியுங்கள். களிம்பு தயாரிக்க சிந்தூர சுதா மலர் ஒன்றும் தேவையில்லை. என்னிட முள்ள சில மூலிகைகளே போதும். உங்கள் மனதை மாற்றவே மகாராணி யார் கூறியபடி சிந்தூர சுதா மலர் பிரச்னையைக் கிளப்பி விட்டேன். பிரச்னை தீர்ந்து அது இப்போது திருமணத்தில் வந்து நிற்கிறது'' என்றார்.

இதைக் கேட்ட ரத்தினசேனன் புன்னகை புரிந்து ''ஓஹோ! விஷயம் இப்படியா போகிறது? நீங்கள் மிருக வைத்தியர் மட்டுமல்ல, மன இயல் மருத்துவரும் கூட எனவே உங்களுக் குப் பரிசுகள் அளிக்க வேண்டும். இருநாடுகளின்பகை மறையவும் என் மகனின்திருமணத்திற்கும்வழிசெய்த உங்களுக்கு இந்த முத்து மாலையைப் பரிசாக அளிக்கிறேன்'' எனக் கூறித் தான் அணிந்திருந்த முத்துமாலை யைக் கழற்றி அந்த வைத்தியருக்கு அணிவித்தான்.



# நஷ்டமே இல்லை!

**சோ**மு, குரு, ராமு என்ற மூவரும் நண்பர்கள். அவர்கள் ஒன்றாகப் போய் மருத்தவப் படிப்பு படித்து தம் ஊரில் ஒன்றாகவே சேர்ந்து இருந்து வைத்தியத் தொழிலை ஆரம்பித்தார்கள். யார் எந்த நோயாளியைப் பார்த்தாலும் அவர் அவனிடமிருந்த மூன்று ரூபாய் வசூலித்து ஆளுக்கு ஒரு ரூபாயாக எடுத்துக் கொள்வது என்று தமக்குள் ஒரு ஏற்பாட்டைச் செய்து கொண்டார்கள். அவர்களுக்கும் நல்ல வருமானம் கிடைத்து வந்தது.

ஒருநாள் சோமுவின் மனைவிக்கு ஒரே தலைவலியாக இருக்கவே வைத்தியசாலைக் குப் போனாள். அங்கே இருந்த குருவிடம் சோமுவைப் பார்த்து தலைவலிக்கு மருந்து வாங்கிக் கொண்டு போக வந்திருப்பதாகக் கூறினாள். குருவோ முதலில் மூன்று ரூபாய் கொடுத்தால்தான் அங்கு எந்த வைத்தியரும் மருந்து கொடுப்பார் என்று கூறினான்.

சோமுவின் மனைவியோ ''நான் சோமுவின் மனைவி. நான்கூட ரூபாய் கொடுக்க வேண்டுமா?'' என்று கேட்கவே குருவும் 'ஆமாம்' எனக் கூறி அவளிடமிருந்து மூன்று ரூபாய் வாங்கிக் கொண்டு அவளை சோமுவிடம் அனுப்பினான்.

அவளும் சோமுவிடம் நடந்ததைக் கூறி ''இன்று மூன்று ரூபாய் நஷ்டம்'' என்றாள். சோமுவோ ''நஷ்டமில்லை. இன்று உனக்கு இலவசமாக மருந்து கொடுத்தால் நாளை குருவின் மனைவிக்கோ அல்லது ராமுவின் மனைவிக்கோ இலவசமாக மருந்து கொடுக்க வேண்டிவரும். இன்று அவர்களுக்கு நம் பணம் கிடைத்தது போல நாளை நமக்கு அவர்கள் பணம் கிடைக்கும்'' என்றான்.

அதுகேட்டு அவன் மனைவி திருப்தி அடைந்தாள்.






# 6

(ரூபதரன் ஒரு வருடகாலம் சுகேசினியின் விருந்தினனாக இருந்துவிட்டுத் தன் ஆட்களுடன் கிளம்பினான். சுகேசினி கூறியபடி அவன் எமலோகத்திற்குப் போய் அவன் தன் பித்ரு தேவதைகளை அதிலும் குறிப்பாகத் தன் தாயையும் கண்டான். அவள் அவனிடம் அவனது குடும்பநிலை பற்றிக் கூறினாள். அதன் பிறகு–)

ரூபதரன் தன் தாயாருடன் பேசிக் கொண்டிருக்கையில் இன்னும் சில ஆவிகள் அவன் கொடுத்த பலியைப் புசிக்க வந்தன. ரூபதரன் அவை பற்றி விசாரித்து அறிந்து கொள்ளலானான். அவற்றில் பல பலியைப் புசித்து விட்டுச் சென்றன.

மிகுந்து நின்ற ஆவிகளில் ராஜ ராஜனது ஆவியும் ஒன்று. அது ரூப தரனைக் கண்டு கண்ணீர் விட்டுக் கதறியது. அது ரூபதரனைக் கட்டித் தழுவ முயன்றது. ஆனால் ஆவியாகப் போன ஒருவனால் உண்மையில் மானிட உருவில் உள்ளவனைத் தழு விக் கொள்ள முடியாதே.

ரூபதரன் மிகவும் பணிவுடன் "ராஜாதி ராஜரே! தாங்கள் இங்கே எப்போது வந்தீர்கள்? எப்படி உங் களுக்கு மரணம் ஏற்பட்டது?" என்று கேட்டான். ராஜராஜனும் "ஒரு சதி



யால் நான் இங்கு வந்தேன். அபலன் என்ற ஒரு கயவனும் என் மனைவியும் சேர்ந்து எனக்கு சாப்பாடு போடும் பாவனை செய்து என்னைக் கொன்று விட்டார்கள். என்னுடன் என் ஆட்களையும் கூடக் கொன்று விட்டார்கள். நீ போரில் பல பயங்கர மரணங்களைப் பார்த்திருப்பாய். ஆனால் ஒரு சாப்பாட்டின் போது இவ்வளவு பேர்கள் இறந்து போனதைப் பார்த்தே இருக்க மாட்டாய்'' என்றான்.

ரூபதரனும் ''ஆம் பிரபு! ஒரு பெண்ணினுடைய மனதின் ஆழத்தை கண்டறியவே முடியாது. நீங்கள் போரிலிருந்து திரும்பி வருவதற்கு முன்பே உங்கள் மனைவி உங்களைக் கொல்லச் சதித் திட்டம் தீட்டி இருக்க வேண்டும். ஆம். பெண்களை நம்பவே கூடாது என்பது என் கருத்து. புவனசுந்தரியைப் பார்த்தீர்களல்லவா? அவளுக்காக எவ்வளவு பேர்கள் பலியானார்கள்!'' என்று கூறினான்.

ராஜ ராஜன் அப்போது ''ஆனால் உன் மனைவியை அப்படிக் கூறமுடியாது. மிக மிக நல்லவள். நீ போருக்குக் கிளம்பும் போதுகூட உங்கள் மணமாகி சில நாட்களே ஆகின. அப்போது அவள் கர்ப்பிணி. அவளுக்கு பிறந்தது ஆண் குழந்தை. அது இப்போது வளர்ந்து வாலிபனாகி இருக்கும்'' என்றான்.

அவர்கள் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கையில் வஜ்ஜிரகாயனின் ஆவி அங்கு வந்தது. ட்ராய்ப் போரில் இறந்து போன மற்ற வீரர்களும் ஆவிகளின் உருவங்களில் அங்கு வந்தார்கள். வஜ்ஜிரகாயன் ரூபதரனைக் கண்டு மகிழ்ந்து போய் பழைய விஷயங்கள் பற்றிப் பேசினான். பிறகு அவன் ''என் மகன் சௌக்கியமாக இருக்கிறானா? அவன் மாவீரனா?'' என்று கேட்டான்.

ரூபதரனும் ''உன் மகன் நவயோதன் மிகுந்த பலசாலி. நவத்யோதனுக்குப் பிறகும், எனக்குப் பிறகும் அவன் போல வியூகத்தை அமைத்தவன் யாருமே இல்லை. அவன் மிகப் பெரிய மாவீரர்களை எல்லாம் போரில் கதிகலங்க வைத்திருக்கிறான். மரக்குதிரைக்குள் ஏறி இருந்த



வர்களில் அவன் ஒருவன்தான் சற்றும் பயப்படாமல் இருந்தவன். இதற்கும் மேலாக அவன் வாளைக் கையிலேந்தி ட்ராய் நகரைத் தான் தாக்க அனுமதிக்க வேண்டுமென்று என்னிடம் அனுமதி கோரினான். போரில் எவ்வளவு பேர்கள் மடிந்தார்கள் என்றும் எவ்வளவு பேர்கள் காயமுற்றார்களென்றும் என்னால் சரியாகக் கூறமுடியாது. ஆனால் நவயோதனின் உடலில் ஒரு சிறுகாயம் கூட ஏற்படவில்லை'' என்றான்.

இதைக்கேட்ட வஜ்ஜிரகாயனின் ஆவி மிகவும் மகிழ்ந்துபோய் அங்கிருந்து சென்றது. ரூபதரன் அங்கு பார்க்க வேண்டியவர்களை எல்லாம் பார்த்து முடித்தான். பிறகு அங்கிருந்து தன் கப்பலிருந்த இடத்திற்கு அவன் திரும்பி வந்தான். அவன் கப்பலை வேகமாக ஓட்டிக் கொண்டு விரைவிலேயே சுகேசினியின் தீவை அடைந்தான்.

சுகேசினி ரூபதரனையும் அவனது ஆட்களையும் மகிழ்ச்சியுடன் வரவேற்றாள். அவள் அவர்களைப் பார்த்து ''நீங்களெல்லாம் மிகவும் கெட்டிக்காரர்கள். பூவலகிலுள்ளவர்கள் ஒருமுறை எமலோகத்திற்குப் போய்விட்டால் திரும்பி வரவே மாட்டார்கள். ஆனால் நீங்கள் திரும்பி வந்திருக்கிறீர்கள். இனி இரண்டாவது முறையாகத்தான் அங்கு போக வேண்டும். இன்று நீங்கள் என் விருந்தினர்களாக இருந்து நன்கு சாப்பிட்டு நன்கு தூங்குங்கள். நாளைக் காலை எழுந்து உங்கள் பயணத்தைத் துவக்கலாம்'' என்றாள்.

கிரேக்கர்கள் அன்று வயிறு புடைக்கப் சாப்பிட்டார்கள். இருட்டும் போது ரூபதரனைத் தவிர மற்றவர்களெல்லாம் கப்பலுக்குப் போய் விட்டார்கள். அங்கு அவர்கள் கடற்கரையில் படுத்து உறங்கலானார்கள். ரூபதரன் சுகேசினியின் வீட்டிலேயே இருந்து எமலோகத்தில் தான் கண்ட அதிசயங்களை எல்லாம் அவளிடம் கூறினான்.

அதைக் கேட்ட சுகேசினி இவ்வாறு கூறினாள். ''இதெல்லாம் நடந்து முடிந்துபோனது. இனி நடக்கப் போவது பற்றி நான் சொல்வதைக்

கவனமாகக் கேள். இனி உன் பயணத்தில் நீ முதலில் நாக கன்னிகைகளைச் சந்திப்பாய். அவர்களது குரலுக்கு கவர்ந்திழுக்கும் சக்தி உள்ளது. அவர்களது குரலைக் கேட்டுப் போனால் இறந்தே போக வேண்டியதுதான். ஆகையால் அவர்களது தீவை அணுகுவதற்கு முன் உன் ஆட்களை காதுகளில் பஞ்சை நன்கு அடைத்துக் கொள்ளச் சொல். உனக்கு அவர்களது குரலைக் கேட்க ஆசை வரலாம். அதனால் உன்னை இறுகப் பாய் மரக்கம்பத்தோடு கட்டி விடும்படி உன் ஆட்களிடம் சொல். நீ எவ்வளவு கதறினாலும் உன்னை அவர்கள் அவிழ்த்து விடக்கூடாது என்று கட்டளை இட்டு விடு. உன் கப்பல் அத்தீவைக் கடந்து நாக கன்னிகைகளின் குரல் முற்றிலும் கேளாமல் போன பிறகே நீ உன் கட்டுகளை அவிழ்த்து விடச் சொல்லலாம். அவர்களும் தங்கள் காதுகளிலிருந்து பஞ்சை எடுத்து விடலாம். இதன் பிறகு நீ கப்பலை செலுத்த இருவழிகள் உள்ளன. இவற்றில் நீ எவ்வழியைத் தேர்ந்தெடுத்துச் செல்ல வேண்டும் என்பதை நான் கூற முடியாது. ஒரு வழி இரு செங்குத்தான நகரும் பாறைகளுக்கு இடையே உள்ளது. அவற்றிடையே ஒரு சிட்டுக் குருவி பறந்தால்கூட அவை சட்டென வந்து மோதி அக் குருவியைக் கொன்று விட்டு நகரும். அவ்வழியே எந்தக் கப்பல் போனாலும் உடைந்து போய்விடும். இரண்டாவது வழி வித்வம்சினி மலையருகே உள்ளது. அந்த மலை மிக உயரமானது. அதன்



உச்சியை எப்போதும் மேகங்கள் மூடி மறைத்துக் கொண்டிருக்கும். அதனால் அதன் உச்சியை யாருமே பார்த்ததில்லை, இதன் மீது ஏறவும் முடியாது. அது வழுவழுப்பாய் கால் வைத்தாலே வழுக்கி விடுவதாயும் இருக்கும். அந்த மலைச்சாரலில் ஒரு குகை உள்ளது. அதில் வித்வம்சினி என்ற ராட்சஸி இருக்கிறாள். அவள் நாய்க்குட்டி போலக் கத்திக் கொண்டிருந்தாலும் அது மிக பயத்தை அளிக்கும். அவளுக்கு ஆறு தலைகளும் பனிரெண்டு கால்களும் உண்டு. அவளது ஆறு கழுத்துகளும் மிகவும் நீளமானவை. அவள் இருக்குமிடம் மிக உயரமானது. ஆயினும் அவள் தன் கழுத்துகளை நீட்டிக் கடலிலுள்ள மீன்களைப் பிடித்துத் தின்கிறாள். அவளிடம் அகப்பட்ட மாலுமி எவனும் உயிருடன் திரும்பி வரவில்லை. அம்மலைக்கும் சற்று தூரத்தில் கடலில் ஒரு சுழல் உள்ளது. அதில் ஒரு கப்பல் அகப்பட்டு விட்டால் திரும்பி வரவே முடியாது. எனவே இந்தச் சுழல் பக்கம் கப்பலை ஓட்டிச் செல்லாமல் அந்த மலையை ஓட்டிச் செல்வதில் ஆபத்து குறைவு. கப்பல் வேகமாகச் சென்றால் வித்வம்சினியால் ஆறுபேர்கள்தான் உயிரிழப்பார்கள். மற்றவர்கள் தப்பி விடலாம். இதற்குப் பின் நீ திரிநாசிய தீவை அடைவாய். அங்கு சூரிய பகவானின் ஆட்டு மந்தையும் பசுக் கூட்டமும் இருக்கும். அவற்றிற்குக் காவலாக சூரியனின் இரு புதல்விகள் இருக்கிறார்கள். அந்த மந்தைகளுக்





குப் பிறப்பும் கிடையாது. இறப்பும் கிடையாது. மீறி எதாவது செய்தால் எல்லோரும் அழிந்து போவார்கள். நீ மட்டும் தப்புவாய். ஆனால் கஷ்டங்கள் அனுபவிப்பாய். எனவே எச்சரிக்கையாக இரு.''

சுகேசினி இவ்வாறு சொல்லி முடிக்கும்போது காலையாகி விட்டது. ரூபதரன் கடற்கரைக்குப் போய் தன் ஆட்களைத் தூக்கத்திலிருந்து எழுப்பினான். எல்லோரும் கப்பலில் ஏறிக் கொள்ளவே, அதுவும் அங்கிருந்து கிளம்பியது. சுகேசினியில் தயவால் காற்றும் அவர்களுக்கு அனுகூலமாகவே வீசியது.

சுகேசினி எச்சரித்த முதலாவது ஆபத்து நாக கன்னிகளைகளிடமிருந்துதான். அதனால் சுகேசினி கூறியதை ரூபதரன் தன் ஆட்களிடம் கூறினான். அவர்களெல்லாம் தம் காதுகளில் பஞ்சை கெட்டியாக அடைத்துக் கொண்டார்கள். அவர்கள் ரூபதரனை பாய் மரக் கம்பத்தோடு இறுகக் கட்டியும் விட்டார்கள். அவனும் அவர்கள் தன்னை எந்த நிலையிலும் கட்ட வழித்து விடக் கூடாது என்றும் வெகு தூரம் போனபிறகுதான் கூறும் போது அவிழ்த்து விட வேண்டுமென்றும் கூறினான்.

நாக கன்னிகைகள் ரூபதரனின் கப்பலைப் பார்த்ததும் பாடத் தொடங்கினார்கள். அவர்களது இனிய குரல் ரூபதரனுக்கு மட்டும் கேட்டது. அவன் தன் கட்டுகளை அவிழ்த்து விடும்படிக் கெஞ்சியும் அவனது ஆட்கள் அதனைச் சட்டை செய்யவில்லை. கப்பல் அத்தீவைக் கடந்து வெகுதூரம் போய்விட்டது. அப்போது நாக கன்னிகைகளின் குரல் கேட்கவில்லை. ரூபதரன் தன் கட்டை அவிழ்க்கச் சொன்னான். அவனது ஆட்களும் தம் காதுகளில் வைத்திருந்த பஞ்சை எடுத்து விட்டு ரூபதரனின் கட்டையும் அவிழ்த்து விட்டார்கள்.

அப்போது ஓரிடத்தில் பெரிய அலைகள் எழுந்து சுற்றிச் சுற்றி வருவதை ரூபதரன் கண்டான். அதுதான் சுகேசினி குறிப்பிட்ட பெரும் சூழல் என்று அறிந்து ''கப்பலைக் கரை ஓரமாக ஓட்டிச் செல்லுங்கள். நாம்

அந்தச் சூழலில் அகப்பட்டுக் கொள்ளாமல் விலகிச் செல்ல வேண்டும்'' என்று தன் ஆட்களை எச்சரித்தான்.

அவர்களும் கப்பலை வித்வம்சினியின் குகை இருந்த பக்கம் ஓட்டிச் சென்றார்கள் ரூபதரன் அவர்களிடம் விதவம்சினி பற்றி எதுவும் கூறவில்லை. அதைச் சொன்னால் அவர்கள் பயந்து கப்பலை ஓட்டிச் செல்லாமல் இருந்து விடுவார்கள் என்று அவன் பயந்தான். ஆனால் அவன் அந்த மலையைக் கூர்ந்து கவனித்தவாறே இருந்தான்.

அந்த மலையை மேகங்கள் சூழ்ந்து கொண்டிருந்தால் வித்வம்சினியின் குகை எங்கே இருக்கிறது என்று அவனுக்குத் தெரியவில்லை. ராட்சஸியும் எங்கிருக்கிறாள் எனத் தெரியவில்லை. கப்பலில் மற்றவர்களோ பெரும் சூழல் உள்ள இடத்தைப் பார்த்துக் கப்பலை அதனருகே போக விடாமல் ஓட்டிக் கொண்டு சென்றனர்.

இதே சமயம் ராட்சஸி தன் ஆறு தலைகளை நீட்டி ரூபதரனின் ஆட்களில் ஆறு பேர்களைப் பிடித்து எடுத்துக் கொண்டது கப்பலிலிருந்த மற்றவர்களுக்கு இது தெரியவில்லை. அவர்கள் கப்பலை வேகமாகச் செலுத்திக் கொண்டிருந்தார்கள்.

சற்று நேரத்திற்குப்பின் ரூபதரன் ஒரு அழகிய தீவைக் கண்டான். அதிலிருந்து பசுக்களும் ஆடுகளும் கத்தும் குரல்கள் அவனுக்குக் கேட்டது. அது சூரிய பகவானின் மந்தைகளுள்ள தீவு என அவன் தெரிந்து கொண்டு விட்டான்.

அப்போது அவனுக்கு சாங்கேதகன் செய்திருந்த எச்சரிக்கையும், சுகேசினி கூறியதும் நினைவிற்கு வந்தன. எனவே அவன் தன் ஆட்களிடம் ''நண்பர்களே! இந்தத் தீவு மிக அழகாகத் தென்பட்டாலும் இதில் நாம் கரை இறங்க வேண்டாம். நீங்களெல்லோரும் களைத்துப் போயிருக்கிறீர்கள். ஆனாலும் நாம் இங்கே தங்காமல் போய் விட வேண்டும்'' என்றான்.

**(தொடரும்)**



# கொடுத்தது எதற்கு?

விதேக மன்னன் தன்னிடம் வந்து கேட்பவர்களுக்குச் சற்றும் தயங்காமல் பொருளைக் கொடுத்து வந்தான். இது அந்நாட்டு முதலமைச்சருக்குச் சற்றும் பிடிக்கவில்லை.

ஒருநாள் மன்னனின் சபைக்கு ஒரு பெண் வந்து கண்ணீர் விட்டுக் கதறியவாறே ''அரசே! இரண்டு ஆண்டுகளுக்கு முன் என் கணவர் இறந்து போனார். நான் திக்கற்ற அநாதையாகி விட்டேன். என் ஒரே மகன் நோயுற்றுப் படுக்கையில் இருக்கிறான். அவனுக்கு வைத்தியம் செய்யப் பணம் இல்லை. தாங்கள் தாம் பண உதவி செய்ய வேண்டும்'' என்று கெஞ்சினாள். மன்னன் உடனே அவளுக்கு நூறு வராகன்கள் கொடுத்து அனுப்பினான்.

மறுநாள் காவல் வீரர்கள் அதே பெண்ணைச் சிறைப்படுத்தி மன்னன் முன் நிறுத்தினார்கள். அப்போது முதலமைச்சர்! நேற்று இவள் கூறியதெல்லாம் பொய். நன்றாக நடித்து உங்கள் மனம் இளகும் படிச் செய்து ஏமாற்றி உங்களிடமிருந்து பணத்தை வாங்கி கொண்டு போய் விட்டாள்'' என்றார்.

மன்னனும், ''இவள் நேற்று நடித்தாளா? எல்லாம் உண்மைபோல இருந்ததே. நடிப்பும் ஒரு கலைதானே. இதனால் இவள் நடிப்புக் கலையில் சிறந்தவள் என்பதற்காக இன்னும் நூறு வராகன்கள் கொடுக்கிறேன்'' என்று கூறி அவளுக்கு அன்றும் நூறு வராகன் கொடுத்து விடுதலை செய்து அனுப்பினான்!






# கோரமுகிக்கு மோட்சம்!

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நடுநிசியில் நீ ஏன் இப்படி சிரமப்படுகிறாய்? உன்னை யாராவது ஒரு மந்திரவாதியோ அல்லது முனிவரோதான் இவ்வாறு செய்யத் தூண்டி இருக்க வேண்டும். ஏனெனில் அவர்கள் நேரடியாகத் தம் சக்தியை உபயோகிக்காமல் உன்னைக் கொண்டு பயன்படுத்த எண்ணி இருக்கலாம். இதற்கு உதாரணமாக கோரமுகி என்ற ராட்சஸியைப் பற்றிக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறி ஒரு கதை சொல்ல ஆரம்பித்தது.

வெகு காலத்திற்கு முன் தண்டக வனப் பகுதியில் கோரமுகி என்ற ராட்

## வேதாளம் சொல்லும் கதை



சஸி வாழ்ந்து வந்தால். அவளுக்கு மனித மாமிசம் என்றால் மிகவும் பிடிக்கும். அவள் வசித்து வந்தது ஒரு பெரிய குகையில். அப்பகுதியில் யாராவது ஒரு மனிதன் வந்து விட்டால் அவனைப் பிடித்து கொன்று விழுங்கி விடுவாள்.

ஒருமுறை அவளுக்கு ஒரே பசி. அவள் உண்ண ஏதாவது கிடைக்குமா வெனக் காட்டில் அலைந்து திரியலானாள். ஓரிடத்தில் அவள் ஞான சீலர் என்ற முனிவர் ஒரு மரத்தடியே அமர்ந்து தவம் செய்து கொண்டிருப்பதைக் கண்டாள்.

கோரமுகி மகிழ்ந்து போய் அவரை அணுகினாள். ஆனால் அவரைச் சுற்றி நெருப்பு வளையம் இருப்பது கண்டு திகைத்து நின்றாள். அப்போது அம்முனிவர் கண்ணைத் திறந்து ''கோரமுகி! மனிதர்களைக் கொன்று தின்னும் இப்பிறவியை விட்டுவிடு. நாளைக்கு நல்ல புனித நாள். சிவ ராத்திரி. எந்த மனிதனையும் கொன்று தின்னாமல் கடவுளை தியானம் செய். அப்போது ஒரு மனிதனிட மிருந்து எல்லாப் பாவங்களையும் போக்கும் கங்கை நீர் உனக்குக் கிடைக்கும். அதனால் நீ இந்த ராட்சஸப் பிறவியை விட்டு நற்கதி அடைவாய்'' என்று கூறினார்.

கோரமுகி முனிவரை வணங்கி ''மகாத்மாவே! தாங்கள் கூறியபடியே செய்கிறேன்'' எனக் கூறி அங்கிருந்து தன் குகைக்குச் சென்று இருக்கலானாள். அப்போதும் அவள் பசியால் துடித்துக் கொண்டிருந்தாள்.

மறுநாள் சிவராத்திரி. நாகலிங்கம் என்ற பக்காத் திருடன் குதிரை மீது அமர்ந்து வருவதை கோரமுகி கண்டாள். அவள் பசி தாங்க முடியாமல் குகைக்கு வெளியே வந்து அவனைப் பிடித்துக் கொண்டு ''யார் நீ?'' என்று கேட்டாள். நாகலிங்கமும் ''நான் ஒரு பக்காத் திருடன். என் பெயர் நாகலிங்கம். சற்று முன் சென்ற ஒரு கல்யாணக் கூட்டத்தினரைத் தாக்கி அவர்களது நகைகளையும் பணத்தையும் பறித்தேன். அவற்றை எல்லாம் உனக்கே கொடுத்து விடுகிறேன். என்னை விட்டு விடு'' என்று கெஞ்சிக் கேட்டான்.



அதைக் கேட்டு கோரமுகி பலமா கச் சிரித்து ''அடே அற்பனே! உன் பணமும் நகைகளும் எனக்கு எதற்கு? எனக்கு ஒரே பசி. நான் உன்னை விட மாட்டேன்'' என்று கூறி அவனைக் கொன்று தின்று விட்டாள். அப் போது சற்று தூரத்தில் இன்னொரு மனிதன் வருவதைக் கண்டு ஓடி அவனைப் பிடித்துக் கொண்டாள்.

அவனிடம் அவள் ''யார் நீ?'' என்று கேட்டாள். ராட்சஸியைக் கண்டு நடுநடுங்கிய அவன் ''என் பெயர்ரங்கதாசன். நான்கலிங்க மன்ன னிடம் சமையல்காரனாக வேலை பார்த்து வந்தேன். திடீரென மன்னர் என்னை வேலையிலிருந்து நீக்கி விட்டார். அதனால் வேறு இடத்தில் வேலை கிடைக்குமா என்று போய்க் கொண்டிருக்கிறேன்'' என்றான்.

கோரமுகி அவனை ஏற இறங்கப் பார்த்து ''மன்னர் உன்னை எந்தக் காரணமும் இல்லாமலா வேலையை விட்டு நீக்கினார்? நீ ஏதாவது தவறு செய்திருப்பாய். உண்மையைச் சொல்'' என்று மிரட்டினாள்.

ரங்கநாதன் 'திரு திரு'வென்று விழித்தவாறே ''ராட்சஸியே! உண் மையைச் சொல்லி விடுகிறேன். என்னைக் கொல்லாமல் விட்டு விடு. வேற்று நாட்டு மன்னன் எனக்கு நிறையப் பணம் கொடுத்து மன்னரின் உணவில் விஷம் கலக்கச் சொன்னான். நான் விஷத்தை உணவில் கலக்கும் போது கையும் களவுமாகப் பிடிபட் டேன்'' என்றான்.

அது கேட்டு கோரமுகி பலமாகச் சிரித்து ''ஓ! அந்த மன்னனின் தண் டனைக்குத் தப்பினாய். ஆனால் என் னிடம் அகப்பட்டுக் கொண்டாய்'' என்று கூறி அவனைக் கொன்று விழுங்கி விட்டாள்.

அப்போது சௌந்தரியன் என்ற இளைஞன் அவ்வழியே வரவே கோர முகியும் ''அடே பயலே! நில் இன் றோடு உன் ஆயுள் முடிந்தது. தெரிந் ததா?'' என்று கத்திக் கொண்டே அவனை நோக்கி ஓடி வந்தாள். சௌந்தர்யனோ ராட்சஸியைக் கண்டு சற்றும் பயப்படாமல் ''நான் ஏன் நிற்க வேண்டும்?'' என்று கேட்டான்.

கோரமுகியோ பலமாகச் சிரித்து



''உன்னை ஏன் நிற்கச் சொன்னேன் என்று இன்னமும் உனக்குப் புரிய வில்லையா? இதுவரை இரண்டு மனிதர்களைக் கொன்று தின்றும் என் பசி அடங்கவில்லை. அதற்காகத்தான் உன்னை நிற்கச் சொன்னேன்'' என் றாள். சௌந்தர்யனும் சற்றும் பயப் படாமல்'' அப்படியா? என்னைக் கொன்று தின்று தாராளமாக உன் பசியை அடக்கிக் கொள். என் உடல் யாராவது ஒருவருக்கு ஏதாவது ஒரு விதத்தில் பயன்படும் என்றால் அதற்காகப் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறேன்'' என்றான் சிரித்துக் கொண்டே.

அதைக் கேட்ட கோரமுகி ஆச்சரி யப்பட்டு ''உன் உயிர் போகப் போகி றதே என்று நீ சற்றும் பயப்பட வில்லையா?'' என்று கேட்டாள். சௌந்தர்யனும் ''பயமா? பிறந்த எந்த மனிதனும் என்றாவது ஒருநாள் இறக் கத்தானே வேண்டும்? ஏதாவது ஒரு நோய் வாய்ப்பட்டு அவஸ்தைப்பட்டு இறப்பதை விட உனக்கு உணவாகி இறப்பது ஒரு புண்ணியமான செயல் தானே'' என்றான்.

அதைக்கேட்ட கோரமுகி அவன் யாரோ ஒரு மகான் என்று எண்ணி னாள். பிறகு ஏதோ சந்தேகப்பட்ட வள் போல அவனைத் தன் இடதுகை யால் உயரத் தூக்கினாள். அப்போது அவன் ''சற்று நில். என் மனைவி நோயுற்றுப் படுத்த படுக்கையாகக் கிடைக்கிறாள். அவளுக்கு கங்கை நீர் கொண்டுவர மிகவும் சிரமப்பட்டு காசிக்குப் போய் விட்டு கங்கை நீருடன் வந்து கொண்டிருக்கிறேன். இந்த நீர் அவளிடம் எப்படியும் சேரப் போவதில்லை. அதனால் நீயாவது இதனால் பயனடை'' என் றான்.

உடனே கோரமுகி சௌந்தர் யனைக் கீழே இறக்கிவிட்டு ''ஐயா புண்ணிய புருஷரே! இந்தக் கங்கை நீரை உங்கள் மனைவியிடமே சேர்த்து விடுங்கள்'' என்று கூறி அவனது கால் களில் விழுந்து வணங்கினாள். அவள் அவளது பாதங்களைத் தொட்டதுமே அவளது உயிர் உடலை விட்டுப் பிரிந்து மோட்சத்தை அடைந்தது.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி ''மன்னனே! ஞானசீல முனிவர் கோர

முகியிடம் சிவராத்திரியன்று எதுவுமே சாப்பிடாமல் கடவுளை தியானம்செய்யச்சொன்னார். ஒரு மனிதன் கொடுக்கும் கங்கை நீரில் அவளது ராட்சஸிப் பிறவி போய் மோட்சம் அடைவாள் என்று கூறினார். ஆனால் கோரமுகி அன்று இரண்டு மனிதர்களைக் கொன்று தின்றாள். சௌந்தர்யனைக் கொல்லாமல் விட்டாலும் அவன் கொண்டு வந்த கங்கை நீரை வாங்கிக் கொள்ளவில்லை. அப்படி இருந்தும் அவளுக்கு மோட்சம் கிடைத்தது. இது எப்படி நிகழ்ந்தது? இதற்குச் சரியான விடை தெரிந்தும் நீ இப்போதே கூறா விட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''கோரமுகி கொன்ற இருவரில் ஒருவன் பக்காத் திருடன். மற்றவன் தன் எஜமானனுக்கே துரோகம் செய்ய நினைத்தவன். இதனால் அவர்கள் மனிதர்களல்ல. ராட்சஸர்கள் என்றாகி விடுகிறார்கள். அதனால் தான் கோரமுகி அவர்களை சிவராத்திரியன்று கொன்று தின்ற போதிலும் எவ்விதப் பாவமும் அவள் அடையவில்லை. கோரமுகி கங்கை நீரைப் பயன்படுத்தாவிட்டாலும் அவள் மோட்சத்தை அடைந்ததற்குக் காரணம் சௌந்தர்யனின் மனப்பான்மையே. சாவின் பிடிப்பில் இருந்தும் அவன் கோரமுகியை வெறுக்காமல் அவள் மோட்சம் அடைய கங்கை நீரைக் கொடுப்பதாகக் கூறியது அவனை கங்கையை விடப் புனிதமானவனாக ஆக்கிவிட்டது. கங்கையிலும் மேலான அவனது பாதங்கள் கோரமுகியின் மீது பட்டதும் அவளது ராட்சஸப் பிறவி நீங்க, அவள் மோட்சத்தை அடைந்தாள். இதுதான் நீ என்னிடம் கேட்ட கேள்விகளுக்குச் சரியான விடையாகும்'' என்று கூறினான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக்கிளம்பி மீண்டும் முருங்க மரத்தின் மீது ஏறிக் கொண்டது.





# உயர்ந்தவர் யார்?

சிவபுர ஜமீன்தாரர் தம் திவானிடம் ஜமீனில் உள்ள கிராமங்களைச்சுற்றிப் பார்த்தும் பாக்கியுள்ள வரியை வசூல் செய்து கொண்டும் மக்கள் நிலை என்ன என்று கண்டறிந்தும் வரும்படிச் சொல்லி அனுப்பினார்.

திவானும் இரு வேலைக்காரர்களைத் தம்மோடு அழைத்துக் கொண்டு பல கிராமங்களுக்குச் சென்றார். அவர் பாக்கி நின்ற வரியை வசூலித்ததோடு மக்களின் கஷ்ட நஷ்டங்களையும் தெரிந்து கொண்டார். அப்போது அவர் பாதை கூடச் சரியாக இல்லாத மந்திரபுரம் என்ற ஊரின் மக்கள் எல்லோரும் ஒன்றும் அறியாத அப்பாவிகளாக இருப்பதைக் கண்டார். ஜமீன்தாரருக்குத் தாம் எவ்வளவு வரிசெலுத்த வேண்டும் என்பதைக் கூட அவர்கள் அறிந்திருக்கவில்லை.

திவான் சிவபுரத்திற்குத் திரும்பி வந்து ஜமீன்தாரரிடம் மக்கள் நிலை பற்றிக் கூறிவிட்டு ''ஐயா! நம் ஜமீனில் மந்திரபுரம் என்னும் ஊர் மிகவும் விசித்திரமானது. அங்குள்ளவர்கள் எல்லோரும் அப்பாவிகள் ஒன்றுமே அறியாதவர்கள். அம்மாதிரியானவர்களை நான் எங்குமே பார்த்ததில்லை'' என்று கூறினார்.

அச்சமயம் நாடெங்கும் திரிந்து வரும் விவாதானந்தர் என்ற சன்னியாசி ஜமீன்தாரரின் பக்கம் அமர்ந்திருந்தார். திவான் கூறியதை எல்லாம் ஜமீன்தாரரோடு சேர்ந்து கேட்டுக் கொண்டிருந்த அவர் ''மனிதர்கள் ஒன்றுமே தெரியாமல் இருந்து போவதற்குக் காரணம் அவர்களிடம் யோசிப்பதற்கும் கேள்விகள் கேட்டு வாதப் பிரதிவாதங்கள் செய்யும் சக்தியும் இல்லாமல் போவதுதான் காரணம். அந்த சக்தியை அவர்களுக்கு அளித்து விட்டால் அவர்களது அறியாமை போய் விடும். எல்லாவற்றையும் புரிந்து

—லாவண்யா வெங்கட்ராமன்—

கொண்டும் விடுவார்கள்'' என்றார்.

ஜமீன்தாரரும் ''இது நடக்கக் கூடியதா, சுவாமிகளே'' என்று கேட்டார். விவாதானந்தரும் ''ஏன் நடக்காது? அந்த மந்திரபுரியை நன்கு அறிந்த ஒரு பணியாளை அனுப்புங்கள். நானும் என் இரு சீடர்களுடன் அந்த ஊருக்குச் செல்கிறேன். சில நாட்களிலேயே அவ்வூராரை நான் மிகச் சிறந்த அறிவாளிகளாக மாற்றிக் காட்டுகிறேன்'' என்றார். ஜமீன்தாரரும் அவரது விருப்பம் போலச் செய்ய அனுமதி அளித்தார்.

சில நாட்களுக்குப் பின் விவாதானந்தர் மந்திரபுரிக்குச் சென்றார். அவ்வூர் அழகாகக் கடற்கரை ஓரமாக அமைந்திருந்தது. எங்கு பார்த்தாலும் பச்சைப் பசேவென்ற வயல்கள். ஊரைச் சுற்றி பழத் தோட்டங்கள்.

இதைப் பார்த்த அவரது சீடர்கள் ''சுவாமி! இவ்வளவு செழிப்பானதும் அழகானதுமான இடத்தில் உள்ளவர்கள் அப்பாவிகள், ஒன்றும் அறியாதவர்கள் என்பது நம்ப முடியாமல் இருக்கிறதே'' என்று கூறினார்கள்.

அதுகேட்டு விவாதானந்தர் முகத்தைச் சுளித்தவாறே ''நீங்களெல்லாம் திவான் சொன்னதெல்லாம் உண்மையல்ல என்றா நினைக்கிறீர்கள்? அது தவறு. சரி. இன்று நதிக் கரையிலுள்ள ஆலமரத்தருகே என் சொற்பொழிவு நடக்கும் என்று ஊரில் அறிவித்து எல்லோரையும் அங்கு வந்து கூடச் சொல்லுங்கள்'' என்றார்.



சீடர்களும் வீடு வீடாகப் போய்த் தம் குரு சொற்பொழிவு ஆற்றப் போவதாயும் எல்லோரும் ஆற்றங்கரை ஆலமரத்தடியே வந்து அவரது சொற்பொழிவைக் கேட்கும்படிக் கூறி விட்டு வந்தார்கள். அந்த ஊராரும் யாரோ மகான் வந்திருக்கிறார் என்று பேசிக் கொண்டு அவர் என்ன சொல்லப் போகிறார் என்பதைக் கேட்க ஆலமரத்தடியே வந்து கூடினார்கள்.

பெரிய கூட்டம் கூடியது கண்டு விவாதானந்தர் மகிழ்ந்து சற்று உயரமான இடத்தில் ஒரு கல்லில் மீது அமர்ந்து கொண்டார். அவர் பேசுவதற்குள் அவரது சீடர்களில் ஒருவன் ரகசியமாக அவரிடம் ''இவர்களை எல்

லாம் பார்த்தால் முரடர்கள் போலவும் போக்கிரிகளாகவும் தென்படுகிறார் கள். நீங்கள் சொல்வது அவர்களுக்குப் பிடிக்கவில்லை என்றால் நம்மை லேசில் விட மாட்டார்கள் அடித்து விரட்டலாம். எனவே நீங்கள் மன்னிக் கும் இயல்பு பற்றி விவரமாகக் கூறுங் கள்'' என்றார்.

விவாதானந்தனரும் ''எல்லாப் பிறவிகளிலும் மனிதப் பிறவி உயர்ந் தது. மனிதனுக்கு மன்னிக்கும் மனப் பான்மை இருக்க வேண்டும். இதுவே சிறந்த குணமாகும்'' என்று கூறி சில உதாரணங்களோடு விளக்கினார்.

அப்போது கூட்டத்திலிருந்து ஒரு வன் எழுந்து ''எங்கள் வீட்டில் திருட வந்த ஒருவனைப் பிடித்தேன். ஆனால் அவனை மன்னித்துவிட்டு விட்டேன். என் மன்னிக்கும் இயல்பு உயர்ந்தது தானே?'' என்று கேட்டான்.

அப்போது இன்னொருவன் எழுந்து ''சுவாமி ஒருநாள் என் வீட் டில் திருட வந்த ஒருவனை நானும் பிடித்தேன். அவனை அடிக்காமலும் திட்டாமலும் அதுவரை என் வீட்டில் திருடிய பொருள்களோடு போய் விடும்படிக் கூறி விட்டு விட்டேன். என் மன்னிக்கும் இயல்பு உயர்ந்தது தானே'' என்று கேட்டான்.

அவன் இவ்வாறு கேட்டு முடிந்த தும் இன்னொருவன் எழுந்து ''என் வீட்டில் திருட வந்த திருடனிடம் நான் அவன் விரும்பும் பொருள்களை எல் லாம் எடுத்துக் கொண்டு போகும்படி முழுமனதுடன் கூறினேன். இந்த மன்னிக்கும் எனது குணம் அவர்கள் இருவரது குணங்களைவிட உயர்ந்தது தானே'' என்று கேட்டான்.

அதுகேட்டு விவாதானந்தர் ''இல்லை. உங்கள் மூவரின் மன்னிக் கும் இயல்பைவிட அத்திருடர்களின் இயல்பே மேல். அப்பாவிகளான உங் களுக்கு ஒரு தீங்கும் இழைக்காமல் விட்டு விட்டுச் சென்றார்களே அது சாமான்னிய விஷயம் அல்ல'' என்று கூறிவிட்டு தம் சீடர்களை அழைத்துக் கொண்டு திரும்பிக் கூடப் பாராம லேயே அங்கிருந்து சென்று விட்டார்.






கம்பாட் வளைகுடாவின் முகத் துவாரத்திலிருந்து டையு தீவையும் குஜரத்தையும் ஒரு கால்வாய் சேர்க்கிறது. 40 சதுர மைல் பரப்புள்ள இந்த அழகிய டையு தீவு ஒரு காலத்தில் கப்பல்கள் வந்து தங்கும் துறைமுகமாக இருந்தது. கி.பி. 1593ல் இதைப் போர்த்துக்கீசியர் தம் வசப்படுத்திக் கொண்டார்கள். 1961ல் இது நம் நாட்டுடன் இணைந்தது. கம்பாட் வளைகுடாவிற்குக் கிழக்கேயுள்ள டாமனுடன் இது சேர்ந்து மத்திய அரசின் ஆட்சிப் பிரதேசமாக உள்ளது.

இத்தீவில் கவர்ச்சிகரமான கட்டடம் டையு கோட்டை. இது

கடற்கரையோரப் பயணங்கள்–2

# கம்பாட் வளைகுடா

படைப்பு: **மீரா நாயர்** ✻ படங்கள்: **கோபிகுமார்**

மூன்று புறங்களில் கடலால் சூழப்பட்டும் நாலாவது புற நிலப்பகுதியில் ஆழமான அகழியும் கொண்டுள்ளது. இதைப் போர்த்துக் கீசியர்கள் கட்டினார்கள். கோட்டையின் உயரமான கோபுரம் இப்போது கலங்கரை விளக்கமாக விளங்குகிறது. இதன் ஒளி மேகமே இல்லாத இரவில். உள் நாட்டில் மிக நன்றாகத் தெரியும்.

இது மற்றொரு துறைமுகமான பாவநகருக்கு 40கி.மீ. தொலைவில் உள்ளது. இதனை 'அலங் கப்பல் உடைக்கும் துறை' என்கிறார்கள். 1983ல் இதை நிர்மாணித்தார்கள். கப்பல்களை கொஞ்சகால உபயோகித்திற்குப் பின் அவற்றை இங்கு உடைக்கிறார்கள். உலகின் பல பகுதிகள்லிருந்து வரும் பழைய கப்பல்களும் இங்கு உடைக்கப்படுகின்றன. இங்கு கடல் அலைகள் வெகு எளிதாகக் கப்பல்களைக் கரை சேர்ப்பதால் இது சிரமமில்லாமல் செய்யப்படுகிறது.





கப்பல்களை எல்லாத் துறைமுகங்களிலும், உடைத்து விடமுடியாது. இப்படிப்பட்ட கப்பல்கள் கரையிலிருந்து 1000 மீட்டர் தூரத்தில் நிறுத்தப்படும்.

அலங்கிற்கு வடகிழக்கே பிராம் என்ற சிறிய பாறைத் தீவு உள்ளது. இதன் தென்கிழக்கு முனைப் பாறைகள் யானை, காண்டாமிருகம், நீர்யானை, குதிரை, எருது, மான், முதலை, ஆமை, பெரிய மீன் எனப் பல வடிவங்களில் தென்படு கின்றன.

கம்பாட் வளைகுடாப் பகுதியில் மற்றொரு முக்கிய பிரதேசம் லோதால், தொல் பொருள் ஆராய்ச்சித் துறையினர் இங்கு சிந்து வெளி நாகரீகத்தின் பல பொருள்களை கண்டு பிடித்திருக்கிறார்கள். பழங்காலத்தில் லோதால் ஒரு துறைமுக மாக இருந்தது. கி.மு. நாலாயிரம் ஆண்டு களுக்கு முன் அதற்கும் மெஸபடோமியா நகரங்களுக்கும் வியாபாரத் தொடர்பு இருந்து வந்ததாம். லோதால் துறை முகத்தில் நீரை நிலை நிறுத்தி வைக்கும் முறை சிறப்பானது. அதனால் கடலில் அலைகள் குறைந்தாலும் கப்பல்கள் எளிதாக இதற் குள் வந்து விட முடியும். வெள்ளத்தின் காரணமாயும் மணலடித்துப் போனதாலும் இப்போது கடல் பகுதி மறைந்து நிலமாகி விட்டது.



லோதாலுக்குத் தென் கிழக்கே முன் காலக் காம்பே துறைமுகமாக விளங்கியதே தற்போது கம்பாட் துறைமுகமாம். இதன் பெயர்தான் இந்த வளைகுடாவிற்கும் வைக்கப்பட்டுள்ளது. இங்கு கடலிலிருந்து எண்ணெய் வருவதால் இது மீண்டும் எல்லோரின் கவனத்தையும் கவர்ந்துள்ளது. இங்கு பல இடங்களில் எண்ணெய் கிடைக்கிறது. பரூச்சிலுள்ள அங்கலேஷ்வர் பகுதியில் எண்ணெய் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. மத்திய ஆசியாவிலும் தென் கிழக்கு ஆசியாவி லும் நன்கு விலைபோகும் சிவப்புக் கற்கள் வெட்டும் சிறு கைத் தொழிலிற்குக் கூட கம்பாட் பெயர் பெற்றது. முன் காலத்திலிருந்த ஒரு சில துறைமுகப் பட்டினங்களையே இப்போது காண முடிகிறது. பருகச்சம் எனப்படும் பருச் மேற்கிந்தியாவின் பெரிய வியாபார மையமாகும். தபதி நதிக் கரையிலுள்ள சூரத் துறைமுகம் 16வது நூற்றாண்டில் முகலாயர் காலத்தில் வியாபாரத்திற்கும், சுற்றுலாப் பயணிகளுக்கும்





மையமாகி மெக்காவின் நுழைவாசல் எனப் பெயர் பெற்றிருந்தது. 17வது நூற்றாண்டில் ஆங்கிலேயர்களும், பிரெஞ்சுக்காரர்களும், டச்சுக்காரர்களும் இங்கு தம் தொழிற் கூடங்களை அமைத்தனர்.

தக்காணத்தின் மீது முகலாயர்கள் படை எடுத்ததை எதிர்த்து 1664ல் மராட்டியர்கள் சிவாஜியின் தலைமையில் சூரத்தை பதிலுக்குத் தாக்கினார்கள். சூரத் பிரதி நிதி இனாயத் கான் கோட்டைக்குள் ஒளிந்து கொண்டு விட்டான். சிவாஜியின் படைகள் நகரைச் சூரையாடின. பிரிட்டிஷ், டச் படைகள் தம் தொழிற் கூடங்களைக் காப்பாற்றிக் கொண்டன. மராட்டியப் படையெடுப்பிற்குப் பின் முகலாயர்கள் நகரைச் சுற்றி உயரமான சுவரை எழுப்பினார்கள்.



ஆறு ஆண்டுகளுக்குப்பின் சிவாஜி இரண்டாவது முறையாக சூரத்தைத் தாக்கினார். முகலாயப் படை அவரை எதிர்த்தாலும் பிறகு கோட்டைக்குள் ஓடிப் போயின. மராட்டியப் படை வீரர்கள் சூரத் நகரை கொள்ளை அடித்து பொருள்களைக் கவர்ந்து சென்றனர். இந்த இரு படை எடுப்புகளால் அந்நகரின் வியாபாரம் நசித்துப் போய் 19வது நூற்றாண்டின் ஆரம்பத்தில் அது தன் முககியத்துவத்தை இழந்தது.



அதனால் பம்பாய் முதலிடம் பெற்றது ஆயினும் தற்போது சூரத் முக்கிய தொழில் நகரமாகவும் வியாபாரமையமாயும் உள்ளது. வைரக்கற்களைப் பட்டை தீட்டுவதற்கும் பெயர் பெற்று நம் நாட்டில் முதலிடம் பெற்றுள்ளது. 1600 கி.மீ நீளமுள்ள குஜராத் கடற்கரையின் கடைசி முனையில் சஞ்சான் கடற்கரை நகரம் உள்ளது. கி.பி எட்டாவது நூற்றாண்டில் இங்கு பார்சிகள் அடி எடுத்து வைத்ததன் சின்னமாக தீப்பிழம்போடு கூடிய பெரிய கம்பம் ஒன்று இங்கு உள்ளது. சஞ்சான் மன்னர் இங்கு பார்சிகளை வர அனுமதிக்க முதலில் தயங்கினார். பார்சி அகதிகளின் தலைவர் மேஹர்ஜீ பாலில் சர்க்கரை கரைவது போல பார்சிகள் இந்நாட்டு மக்களுடன் கலந்து வாழ்வார்களென உறுதி அளித்தார். மன்னர் ஜாடி ராணா மகிழ்ந்து பார்சிகள் அங்கு தங்க அனுமதித்து அவர்களை ஆதரித்தும் வந்தார். பார்சிகளும் தாம் வாக்களித்தபடி குஜராத்தி மொழியைக் கற்றும் அப்பகுதி மக்களின் பழக்க வழக்கங்களையும் தமதாக்கி கொண்டும் இந்நாட்டின் முன்னேற்றத்திற்கும் உழைக்கலானார்கள்.

சஞ்சானுக்கு வடக்கே உத்வாடாவில் பார்சிகள் கட்டிய ஈரான்ஷா அடாஷ் பெஹ்ரம் ஆலயத்தில் அவர்கள் தம்முடன் ஈரானிலிருந்து எடுத்து வந்த அக்கினியை வைத்துப் பாதுகாத்து வருகிறார்கள். இது தமக்குக் கிடைத்த மாபெரும் பேறு எனப் பார்சி அர்ச்சகர்கள் கருதுகிறார்கள்.



# நெய் விவகாரம்

மாங்குடி என்ற கிராமத்தில் மரு தப்பன் என்ற நெய் வியாபாரி இருந் தான். அவன் சுத்தமான நெய்யையே விற்று வந்தான். கொஞ்சம் கூட அவன் நெய்யில் எதுவும் கலக்காததால் அவன் விற்கும் நெய் வெகு நாட்களுக் குக் கெடாமலும் வாசனையுடனும் இருக்கலாயிற்று. இதனால் மக்களி டையே அவனுக்கு நல்ல பெயர் இருந் தது. அவனது வியாபாரமும் நன்கு நடந்து வந்தது.

மாங்குடி ஒரு ஜமீன்தாரரின் கீழ் இருந்தது. அந்த ஜமீன்தாரருக்கு அவ ரது உறவினர்களால் சில சிக்கல்கள் ஏற்பட்டன. இதனால் அவரது மன தில் நிம்மதி இல்லாது போயிற்று அவர் தன் ஜாதகத்தை சமஸ்தான ஜோசியரிடம் காட்டிய போது ஜோசி யரும் நவக்கிரக ஹோமம் செய்து சாந்தி செய்தால் நிலைமை சரியாகி விடும் என்று கூறினார்.

ஜோதிடர் என்னவோ நவக்கிரக ஹோமம் செய்து விடலாம்மென்று சுலபமாகக் கூறிவிட்டார். ஆனால் அந்த ஹோமத்திற்கு வேண்டிய பொருள்களைச் சேகரிக்கும் பொறுப்பு சமஸ்தானப் புரோகிதர் மீது விழுந்தது. முதலில் அவர் ஹோமம் செய்வதற்கு வேண்டிய நெய்யைப் பற்றி யோசித்தார். அதற்கு சுத்தமான பசும் நெய் வேண்டும். அதில் கலப்படமே இருக்கக் கூடாது.

அவர் மாங்குடி நெய் வியாபாரி மருதப்பனைப் பற்றிக் கேள்விப் பட்டிருந்தார். அவர் அவனை வர வழைத்து "இதோ பார்! ஜமீன்தாரர் இன்றைக்கு எட்டாவது நாள் நவக் கிரக ஹோமம் செய்யப் போகிறார். அதற்கு பத்து படி பசும் நெய் வேண் டும். நெய் சுத்தமானதாய் கலப்படம் இல்லாமல் இருக்க வேண்டும். உன்னைப் பற்றி நன்கு தெரியும். இது

—சுப. கிருஷ்ணசுவாமி—



புண்ணிய காரியம். இதில் எந்தத் தவறும் ஏற்பட்டு விடக்கூடாது. அதனால் தான் எச்சரிக்கிறேன்'' என்றார்.

மருதப்பனும் பத்து படி பசும் நெய்யை ஹோமத்திற்கு முன் கொடுத்து விடுவதாக வாக்குறுதி கொடுத்துவிட்டுச் சென்றான். ஆனால் ஹோமத்திற்கு சுத்தமான பசும் நெய் பத்துபடி சேகரிப்பது மிகவும் சிரமமாக இருந்தது.

ஒருவாறாக மருதப்பன் பத்து படி நெய் சேகரித்து விட்டான். அப்போது ஜமீன்தாரரின் நெருங்கிய உறவினர் ஒருவருக்கு ராஜ பிளவை ஏற்பட்டது. உடலில் மேக வியாதி வேறு படரலாயிற்று. அவருக்கு வைத்தியம் செய்யும் வைத்தியர் ''பச்சிலைக்குப் பசும் நெய் தடவி வாட்டி ராஜபிளவைக்கும் மேகம்படர்ந்த இடங்களிலும் போட்டால் குணமாகிவிடும். பசும் நெய் மட்டும் சுத்தமானதாக இருக்க வேண்டும்'' என்றார்.

உடனே ஜமீன்தாரரின் உறவினர் சுத்தமான கலப்படமற்ற பசும் நெய்யிற்காகத் தம் வேலையாளை மருதப்பனிடம் அனுப்பினார். அப்போது நவக்கிரக ஹோமம் ஆரம்பமாக நான்கு நாட்களே இருந்தன. மருதப்பன் சிரமப்பட்டு பத்து படி பசும் நெய் சேர்த்து விட்டான். அதை ஜமீன்தாரரின் புரோகிதரிடம் கொண்டு போய்க் கொடுக்கலாம் என்று நினைக்கையில் ஜமீன்தாரரின் உறவினரின் ஆள் வந்து வைத்தியத்திற்காக அவசரமாக ஒரு படி பசும் நெய் வேண்டுமென்று கேட்டான்.

மருதப்பன் யோசித்துப் பார்த்தான். ஜமீன்தாரரின் உறவினருக்கு நெய் கொடுக்கா விட்டால் ஒரு வேளை ஜமீன்தாரர் கோபித்துக் கொள்வாரோ என நினைத்து ஒரு படி நெய்யை அந்த ஆளிடம் கொடுத்து அனுப்பினான். ஹோமத்திற்கு இன்னும் நான்கு நாட்கள் இருப்பதால் அதற்குள் ஒரு படி நெய்யை எப்படியாவது சேர்த்துவிடலாம் என்று எண்ணினான்.

ஆனால் அவனால் ஒருபடி பசும் நெய்யை நான்கு நாட்களுக்குள் சேகரிக்க முடியாமல் போய் விட்டது. முடிவில் அவன் ஒன்பது படி பசும்

நெய்யை எடுத்துக் கொண்டு போய் புரோகிதரிடம் கொடுத்து நடந்து போனதை அவரிடம் கூறினான்.

எல்லாவற்றையும் கேட்ட புரோகிதரும் ''கவலை வேண்டாம். உள்ளதைக் கூறி சுத்தமான பசும் நெய் ஒன்பது படி கொண்டு வந்து கொடுத்தாயே அதுபோதும். நவக்கிரக ஹோமத்திற்கு ஒன்பது படி நெய்யே போதுமானதுதான். நான்தான் கூடவே ஒரு படி நெய் இருக்கட்டும் என்று எண்ணி பத்துபடி நெய் கொண்டு வரச் சொன்னேன். நீ உண்மையைக் கூறியது உன் நேர்மைமைப் காட்டுகிறது. பாராட்டுகிறேன். நவக்கிரக ஹோமத்தில் தச தானங்கள் என்று பத்து தானங்கள் கொடுப்பது உண்டு. நீ ஜமீன்தாரரின் உறவினருக்குக் கொடுத்த நெய்யை பத்தாவது தானமாகக் கருதலாம். உன் நேர்மைக்குப் பரிசாக இந்தப் புண்ணியமும் சேர்கிறது'' என்றார்.

மருதப்பனும் ''அப்பாடா! என் கவலை தீர்ந்தது. ஒன்பதுபடி நெய் தானே உள்ளது, பத்துபடி இல்லையே என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். ஜமீன்தாரரின் உறவினருக்கு வைத்தியத்திற்காக ஒருபடி நெய் கொடுத்தது தவறோ என்று எண்ணி வருத்தப்பட்டுக் கொண்டிருந்தேன். நல்லவேளையாக நீங்கள் அதை ஒரு புண்ணிய காரியம் என்றதோடு ஹோமத்திற்கும் ஒன்பதுபடி நெய் போதும் என்றீர்கள். இப்போது தான்



என் மனம் நிம்மதி பெற்றது'' என்று கூறி அவரை வணங்கி விட்டுச் சென்றான்.

புரோகிதரும் நவக்கிரக ஹோமத்தை செய்து முடித்தார். அதன் பிறகு ஹோமத்தின் மகிமையாலோ அல்லது வேறு காரணங்களாலோ ஜமீன்தாரரது சிக்கல்களெல்லாம் தீர்ந்து போயின. அதனால் அவர் உற்சாகத்துடன் இருந்தார் அவரது உறவினரின் நோயும் குணமாகி விட்டது.

ஹோமம் முடிந்து இரண்டு நாட்களான பிறகு ஒருவன் மருதப்பனுக்கு ஒருபடி பசும்நெய் கொண்டு வந்து கொடுத்தான். அதை என்ன செய்யலாம் என்று மருதப்பன் யோசித்தான்.

பிறகு அதை எடுத்துக் கொண்டு புரோகிதரிடம் போய் ''ஐயா! நீங்கள் முன்பு எனக்கு மன நிம்மதி ஏற்படுத்திப் பெரிய உபகாரம் செய்தீர்கள். இப்போது இந்த ஒருபடி நெய்யை தானமாக ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று வேண்டினான். புரோகிதரும் அதனை ஏற்றுக் கொண்டார்.

மருதப்பன் செய்த இந்த தானம் பற்றி ஊர் முழுவதும் தெரிந்தது. ஜமீன்தாரரும் அது பற்றிக் கேள்விப் பட்டு தன் தர்பாரைக் கூட்டி அதற்கு புரோகிதரையும், மருதப்பனையும், உறவினரையும் வரும்படிக் கூறினார்.

எல்லோரும் வந்ததும் ஜமீன்தாரர் தம் உறவினரைப் பார்த்து ''புரோகிதர் ஹோமத்திற்கு பத்துபடி பசும் நெய் வேண்டும் என்றார். மருதப்பன் அவரிடம் ஒன்பதுபடி நெய்தான் கொடுத்தான். அவன் சேர்த்து வைத்திருந்த பத்துபடி நெய்யில் ஒருபடி நெய்யை நீங்கள் உங்கள் வைத்தியத்திற்காக வாங்கிக் கொண்டதாகத் தெரிகிறது. இதனால் தான் ஒன்பதுபடி நெய்யைக் கொண்டே புரோகிதர் ஹோமத்தை நடத்தி விட்டாரோ என்ற சந்தேகம் ஏற்படுகிறது'' என்றார்.

அப்போது மருதப்பன் ''ஆபத்தில் அகப்பட்டவரைக் கடவுளே காப்பாற்றுவார் என்பதுதான் என் நம்பிக்கை. அதன்படி நான் நடந்ததைச் சொன்னதும் புரோகிதர் ஹோமத்திற்கு ஒன்பதுபடி நெய்யே போதுமென்றும் எதற்கும் இருக்கட்டும் என்று அதிகப்படியாக ஒருபடியைக் கூறியதாகவும் சொன்னார். நான் புரோகிதருக்கு தானமாகக் கொடுத்த நெய் ஹோமத்திற்குப் பிறகே. அந்த நெய் நியாயமாக ஹோமத்திற்கான நெய்யே என நினைத்து அதை யாருக்கும் விற்காமல் புரோகிதருக்கே தானமாகக் கொடுத்து விட்டேன். எனவே தங்களது ஹோமம் குறையில்லாமல் நடந்து விட்டது என்றே நினைக்கிறேன்'' என்றான்.

இது கேட்டு எல்லோரும் 'பேஷ்', 'பேஷ்' என்றார்கள். ஜமீன்தாரும் மருதப்பனை மிகவும் பாராட்டினார்.





# சொன்னது இதுதான்!

சிதம்பரத்தில் சிவநேசன் என்ற கல்யாணத்தரகன் இருந்தான்! அவன் பேச்சில் சூராதி சூரன். அவன் தம் பேச்சாலேயே கழுதையைக் குதிரை என்று பிறர் நம்பும்படிச் செய்து விடுவான்.

அதே ஊரில் ஈசுவர சாஸ்திரி என்பவர் தம் மகள் சிவகாமிக்குத் திருமணம் செய்ய எண்ணினார். அவர் நன்கு படித்த பண்டிதர். ஆனால் அவரது மகள் சிவகாமிக்கோ படிப்பே ஏறவில்லை. பார்ப்பதற்கும் அவ்வளாக அழகாகவும் இல்லை.

அவரது மகளைக் கல்யாணம் செய்து கொள்ளப் பலர் தயாராக இருந்தனர். அதற்குக் காரணம் அவரிடம் இருந்த பணம்தான். அவரோ தன் மகளை விவாகம் செய்து கொள்ள வந்தவர்களை எல்லாம் படிப்பு இல்லை, அழகு இல்லை என்று ஏதாவது ஒரு சாக்கு கூறித் தட்டிக் கழித்து வந்தார்.

ஒருநாள் அவரது மனைவி அவரிடம் ''நீங்கள் இப்படியே வருபவர்களை எல்லாம் தட்டிக் கழித்துக் கொண்டே போனால் நம் மகளுக்கு எப்போதுதான் கல்யாணம் ஆகும்? அப்படியாவது நம் மகளுக்கு அழகாவது படிப்பாவது இருக்கிறதா? இல்லை. நான் சொல்வதைக் கேளுங்கள். பேசாமல் இவளை என் அண்ணன் மகனுக்குக் கட்டி வைத்து விடுங்கள். இருவரும் ஒருவரை ஒருவர் விரும்பவும் விரும்புகிறார்கள்'' என்றாள்.

ஈசுவர சாஸ்திரியோ ''உன் அண்ணன் மகனுக்கு என்ன இருக்கிறது என்று என் மகளை அவனுக்குக் கொடுப்பது? யாருடைய ரெண்டு ஏகரா நிலத்தையோ குத்தகைக்கு எடுத்துப் பயிர் செய்கிறான். புரோகிதமாவது செய்வானா என்றால் அதற்கும் வேத அத்யயனம் கூடச் செய்ய

—கி. வெங்கடாசலம்—



வில்லை நான் என் மகளை அந்த மக்குவிற்குக் கொடுக்க மாட்டேன்'' என்றார். அவரது மனைவி வாயை மூடிக் கொண்டு பதில் பேசாமல் தன் வேலையை கவனிக்க போய் விட்டாள்.

மறுநாள் காலை சிவநேசன் சிரித்த முகத்துடன் ஈசுவர சாஸ்திரியைச் சந்திக்க அவரது வீட்டிற்கு வந்தான். சாஸ்திரியும் ''என்ன தரகரே? ஏதாவது வரன் கொண்டு வந்திருக்கிறீர்களா? நீங்கள் சும்மா இங்கே வரமாட்டீர்களே'' என்று கேட்டார்.

சிவநேசனும் ''புவனகிரியில் ஒரு நல்ல வரன் இருக்கிறான். பெற்றோருக்கு ஒரே மகன். பெயர் சுக்கராச்சாரி. பெயருக்கு ஏற்ப உயர்ந்தவர். நம் சிவகாமிக்குச் சரியான ஜோடி'' என்றான். சாஸ்திரியும் ''ஓகோ! அவனைப் பற்றிக் கூறும், கேட்கலாம்'' என்றார்.

சிவநேசனும் ''பையன் பகலில் சுக்கிராச்சாரி போல என்றால் இரவில் கௌரவகுலபதி போல, இராமாயணம், மகாபாரதம் எல்லாம் தலை கீழ் பாடம், வால்மீகியின் மறு அவதாரம் என்றோ காளிதாசனின் மறு பிறப்போ என்றும் கூறலாம். சங்கீத ஞானம் பற்றிக் கேட்கவே வேண்டாம். வீணையைப் புல்லாங்குழல் போல் வாசிப்பான். புல்லாங்குழலையோ மிருதங்கம் போல வாசிப்பான். அவன் சக்தி சாமர்த்தியம் பற்றிக் கேட்கிறீர்களா? அவன் வீட்டின் பின்புறம் ஒரு முருங்கை மரம் இருக்கிறது. அதில் ஏறி அவன் அம்மரத்தின் உச்சாணிக் கிளைக்குக் கூடப் போய் முருங்கைக் காய்களைப் பறித்துக் கொண்டு வந்து விடுவான் என்றால் அவன் சாமர்த்தியத்தைப் பற்றி வேறு என்ன சொல்ல இருக்கிறது'' என்றான்.

சாஸ்திரியும் ''சரி, அவனுக்கு என்ன சொத்து, சுகம் நிலம், நீச்சு என்றெல்லாம் இருக்கிறது? அது பற்றிக் கொஞ்சம் சொல்லுங்கள் பார்க்கலாம்! என்றார்.

சிவநேசனும் ''வீட்டிலிருந்து பகலில் சூரியனையும் இரவில் சந்திரனையும் நட்சத்திரங்களையும் பார்த்து விடலாம். இவ்வளவு நல்ல வரன் கிடைக்காது. விட்டு விடாதீர்கள்''

என்றான்.

சாஸ்திரி ஏதோ யோசித்துக்கொண்டிருக்கவே சிவநேசனும் "அப்படியானால் பிள்ளை வீட்டாரைப் பெண் பார்க்க நாளை மறுநாளைக்கு வரச் சொல்லலாமா?" என்று பணிவுடன் கேட்டான். சாஸ்திரியும் "வேண்டாமப்பா! நீ இங்கிருந்து போனால் போதும். என் மகளை என் மைத்துனன் மகனுக்கே கல்யாணம் செய்து வைக்கத் தீர்மானித்து விட்டேன். நீ போய் வா" என்று எரிச்சலோடு கூறி அனுப்பி விட்டார்.

தரகன் சிவநேசன் கூறியதை எல்லாம் சாஸ்திரியின் மனைவியும் கேட்டுக்கொண்டிருந்தாள். அதனால் தன் கணவன் எடுத்த திடீர் முடிவு அவளுக்கு வியப்பை அளித்தது.

தன் மனைவி நினைத்ததை ஊகித்து விட்ட சாஸ்திரி "தரகன் சொன்ன பையனை நான் வேண்டாமெனச் சொல்லி விட்டேன் என்று தானே நீ நினைக்கிறாய்? அந்தத் தரகன் வெறும் சவடால் பேர்வழி. வாய்ப் பந்தல் போட்டே என்னை மடக்கப் பார்த்தான். நானா ஏமாறுவேன்? தன் பாச்சா பலிக்கவில்லை என்று கண்டதும் அவன் போய் விட்டான்" என்றார்.

சாஸ்திரியின் மனைவியும் "அவர் அப்படி ஒன்றும் கெட்டதாகச் சொல்லவில்லையே பையனைப் பற்றிக் கூறியதை நானும்தான் கேட்டேனே. எல்லாம் நன்றாக இருப்பதைத்தானே சொன்னார்?" என்றாள். சாஸ்திரியும் "அடி அசடே! அவன் சொன்னதை நீ



அப்படியே நம்பி விட்டாய் ஆனால் அதன் அர்த்தம் என்ன தெரியுமா? சொல்கிறேன் கேள்'' என்று விவரிக்க லானார்.

''பையன் பெயர் சுக்கிராச்சாரி. பெயருக்கு ஏற்ப உயர்ந்தவன் என்றால் புராணத்தில் வரும் சுக்கிராச்சாரியார் போல ஒரு கண் இல்லாதவன் என்று பொருள். பகலில் சுக்கிராச்சாரி என்றால் பகல் வேளையில் அவனால் ஒரு கண்ணால்தான் பார்க்க முடியும் என்று பொருள். இரவில் கௌரவ குலபதி என்றால் திருதராஷ்டிரனைப் போலப் பார்க்க முடியாதவன் என்று பொருள். இராமாயணம், மகாபாரதம் எல்லாம் தலை கீழ் பாடம் என்றால் அப்புத்தகங்களை அவனுக்குத் தலை கீழாகத்தான் வைக்கத் தெரியும் என்றாகிறது. வால்மீகியும் காளிதாசனும் மறுபிறப்பு என்றால் அவர்கள் ஆரம்ப காலத்தில் படிப்பில்லாதவர்களாக இருந்தது போல இவனும் இருக்கிறான் என்று பொருள். முருங்கை மரத்தில் ஏறி உச்சாணிக் கொம்பிற்குப் போவான் என்றால் குரங்கு போலத் தாவி சேட்டை செய்வான் என்றாகிறது. இனி அவனுக்குள்ள சொத்து ஒரு ஓட்டைக் குடிசைதான். அதன் கூரையில் பல ஓட்டைகள் இருப்பதால் பகலில் சூரியனையும் இரவில் சந்திரனையும் நட்சத்திரங்களையும் அக்குடிசையிலிருந்தே காணமுடியும் என்பது பொருள்.''

சாஸ்திரி இவ்வாறு தரகன் கூறியதற்குப் பொருள் கூறிவிட்டு ''தூரத்துப் பச்சை கண்ணுக்குக் குளிர்ச்சியாக தெரியும். பக்கத்தில் போய்ப் பார்த்தால்தான் அதன் குறைபாடுகள் தெரியும். கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அலைவானேன்? அதனால் தான் சிவகாமியை உன் அண்ணன் மகனுக்கே கொடுக்க முடிவு செய்தேன். மேலும் அவர்கள் ஒருவரையொருவர் விரும்புவதாக வேறு நீயும் சொன்னாயே'' என்றார்.

மறைவில் நின்ற சிவகாமி இதைக் கேட்டுப் பூரித்துப் போனாள்!






துவாரகையிலிருந்தவர்கள் யாவரும் அந்தர்தீபத்தில் நடக்கும் திருவிழாவைக் காணச் சென்று விட்டதால் அர்ஜுனனும் சுபத்திரையை மணக்க எவ்வித இடையூறோ தடங்கலோ இல்லாது போயிற்று.

அர்ஜுனன் அவளிடம் ''தந்தையாவது அண்ணனாவது கன்னிகா தானம் செய்து அக்கினி சாட்சியாக எல்லாம் முறைப்படி நடப்பது தான் விவாகம். ஆனால் நாம் இவ்வாறு மணந்து கொள்ள இப்போது முடியாமல் போகிறது. ஆனால் இரு மனங்கள் ஒப்புக் கொண்டதால் இன்றிரவு நாம் காந்தர்வ விவாகம் செய்து கொள்ளலாம். அது க்ஷத்திரிய தர்மமும் ஆகும். இப்படிப்பட்ட விவாகம் பற்றி நீ என்ன கூறுகிறாய்?'' என்று கேட்டான். இதற்கு சுபத்திரை பதில் எதுவும் கூறாமல் தன் தமையனாரான கிருஷ்ணரை நினைத்துக் கொண்டு கண்ணீர் வடித்தாள்.

அர்ஜுனன் விரும்பியபடி நடக்காமல் போகவே அவன் இந்திரனை தியானித்தான். இந்திரன் தன் மனைவியான சசிதேவியுடனும் அருந்ததி, வசிஷ்டர், நாரதர், மற்றும் சில முக்கிய தேவர்களையும் அப்ஸரப் பெண்களையும் அழைத்துக் கொண்டு அர்ஜுனன் இருக்கும் இடத்திற்கு வந்தான்.

இதேசமயம் பலராமர் தன் ஆட்களோடு படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கும் போது கிருஷ்ணர் அக்ரூரரையும் சாத்தியகியையும் கதனையும் அழைத்துக் கொண்டு துவாரகைக்கு



வந்து சேர்ந்தார். அவருடன் தேவகியும், ருக்மிணியும் வந்தனர்.

அப்போது இந்திரன் கிருஷ்ணரின் நலன் பற்றி விசாரித்து விட்டு ''என் மகன் அர்ஜுனனுக்கு உங்கள் தங்கை சுபத்திரையை மனம் செய்து வைக்க நினைக்கிறேன். அதற்கும் சம்மதம் தானே'' என்று கேட்டான். ''ஆகா. இது எங்களுக்குச் சம்மதமே'' என்று கிருஷ்ணரும் மற்ற யாதவர்களும் கூறினார்கள்.

இந்திரன் அர்ஜுனனுக்கு மங்கள ஸ்நானம் செய்வித்து பட்டாடைகள் அணிவித்து மலர்களாலும் ஆபரணங்களாலும் அலங்கரித்து அவனை அழைத்து வந்தான். இதற்குள் அருந்ததியும் சசிதேவியும் தேவகியும் ருக்மிணியும் சுபத்திரையை அழைத்துப் போய் ஸ்நானம் செய்வித்து பட்டாடைகள் அணியச் சொல்லி ஆபரணங்களாலும் மலர்களாலும் அலங்கரித்து அவளை அழைத்துக் கொண்டு வந்தார்கள்.

திக்பாலர்கள் எதிரிலும் நாரதர், விசிஷ்டர் ஆகியோர் முன்னிலையிலும் சுபத்திரைக்கும் அர்ஜுனனுக்கும் சாஸ்திரப்படி விவாகம் நடைபெற்றது. தேவர்கள் அவர்களை ஆசீர்வதித்து விட்டுத் திரும்பிச் சென்றார்கள். யாதவர்களும் அந்தர்தீபத்திற்குப் போனார்கள். போகு முன் கிருஷ்ணர் அர்ஜுனனிடம் ''அர்ஜுனா! நீ இங்கு இன்னும் இருபது நாட்கள் இரு. அதன் பிறகு நீ இந்தத் தேரில் சுபத்திரையுடன் அமர்ந்து இந்திரப்பிரஸ்தத்திற்குச் செல்'' என்று கூறி வேகமாகச் செல்லக் கூடிய நான்கு குதிரைகளையும் கொடுத்து விட்டுப் போனார்.

அர்ஜுனனும் துவாரகையில் இருபது நாட்கள் இருந்து விட்டு ''என் சாதுர் மாஸ்ய விரதம் முடிந்து விட்டது. பிராம்மண போஜனம் போட வேண்டும். அதற்கான ஏற்பாடுகளைச் செய்'' என்று சுபத்திரையிடம் கூறினான். அதன்படி பிராம்மண போஜனம் நடந்தபின் அர்ஜுனன் தன் ஆயுதங்களை எடுத்து ரதத்தில் வைக்கும்படி சுபத்திரையிடம் கூறினான். அவளும் அப்படியே செய்தாள்.



அர்ஜுனன் சுபத்திரையையும் அவளது தோழிகளையும் தேரில் ஏற்றிக் கொண்டான். தேரை இந்திரப் பிரஸ்தம் செல்லும் வழியில் அவன் ஓட்டினான்.

அச்செய்தி அந்தர் தீபத்தில் பரவியது. அங்குள்ள யாதவ வீரர்கள் தாம் போய் அர்ஜுனனைத் தோற்கடித்து சுபத்திரையை மீட்டுவருவதாக மார் தட்டினார்கள். பலராமன், அவர்களைத் தடுத்து கிருஷ்ணரிடம் ''பார்த்தாயா. அர்ஜுனன் செய்த துரோகத்தை? ஏன் பேசாமல் இருக்கிறாய்? இது நமக்கு அவமானம். நீ சொல் இப்போதே கௌரவ வம்சம் இல்லாது செய்து விடுகிறேன்'' என்று உறுமினான்.

அது கேட்டு கிருஷ்ணர் பலராமரிடம் ''அர்ஜுனன் செய்த குற்றம் என்ன? நம் சுபத்திரைக்கு அவனைவிட நல்ல கணவனாக வேறு யார் கிடைப்பான்? உங்களால் அவனைத் தோற்கடிக்கத்தான் முடியுமா? அவனோடு நீங்கள் போர் புரிந்தால் தோற்று அவமானப்படுவீர்கள். அதனால் அவனோடு சமாதானமாகப் போவதே நல்லது. எனக்கென்னவோ போரைவிட சமாதான வழியே சரியானதாகத் தெரிகிறது'' என்றார்.

கிருஷ்ணர் கூறியதை யாவரும் ஏற்றனர். அர்ஜுனன் சுபத்திரையுடன் இந்திரப் பிரஸ்தத்தை அடைந்து குந்தியையும் தன் தமையன்மார்களையும் வணங்கினான். பிறகு அவன் துரௌபதியைக் காணச் சென்றான். ஆனால் அவள் அவன் சுபத்திரையை மணம் செய்து கொண்டு வந்ததற்காக கோபம் கொண்டாள். ஆனால் அர்ஜுனன் பக்குவமாகக் கூறி அவளைக் சமாதானப் படுத்தினான் சுபத்திரையும் குந்தி தேவியையும் துரௌபதியையும் நமஸ்கரித்தாள். துரௌபதியும் அவளைக் கட்டித் தழுவி ஆசீர்வதித்தாள்.

இந்திரப் பிரஸ்தத்தில் யாவரும் சுகமாகக் காலம் கழித்துக் கொண்டிருந்தார்கள். கிருஷ்ணர் பலராமனையும் அக்ரூரரையும், சாம்பன், மற்றும் பல யாதவப் பிரமுகர்களையும் அழைத்துக் கொண்டு சுபத்திரைக்கு சீரும் கொண்டு வந்தார். இதை அறிந்த



தருமர் தன் நான்கு தம்பிகளையும் அவர்களை எதிர் கொண்டழைக்க அனுப்பினார். யாதவர்கள் தக்க மரியாதைகள் பெற்று இந்திரப் பிரஸ்தத்திற்குள் வந்தார்கள்.

யாதவர்கள் சீராகக் கொண்டு வந்த யானைகளும், ரதங்களும், குதிரைகளும், பசுக்களும், தங்கமும் தருமரிடம் கொடுக்கப்பட்டன. அவர் அவற்றை ஏற்று எதிர் மரியாதையும் செய்து கௌரவித்தார். அதன் பின் கிருஷ்ணரைத் தவிர மற்ற யாதவர்கள் திரும்பிச் சென்றார்கள்.

கொஞ்ச காலத்திற்குப் பின் அர்ஜுனனுக்கும் சுபத்திரைக்கும் ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அதற்கு அபிமன்யு என்று பெயரிட்டார்கள். துரௌபதிக்கும் ஐந்து பாண்டவர்களுக்கும் ஐந்து குழந்தைகள் பிறந்தன. பிரதிவிந்தியன், சுதசோமன், சுருதசோமன், சதானிகன், சுருதசேனன் என அவர்களுக்குப் பெயரிடப்பட்டது. இவர்கள் எல்லோருமே அர்ஜுனனிடம் வில்வித்தை கற்றனர். வில் வித்தையில் அர்ஜுனனுக்குச் சமமாக அபிமன்யு விளங்கினான்.

கிருஷ்ணர் இந்திரப்பிரஸ்தத்தில் இருந்தபோது அங்கு கடுமையான வெப்பம் தாக்கியது. காடுகள் தீப்பற்றி எரிந்து எங்கும் ஒரே சூடாக இருந்தது. வெப்பமான காற்று வீசிக் கொண்டிந்தது. நதிகள் வரண்டு போயின. உயிரினங்கள் தவிக்கலாயின. அப்போது அர்ஜுனன் கிருஷ்ணரிடம் ''இந்த வெப்பம் தாங்க முடியாததாக இருக்கிறதே நாம் எல்லோரும் யமுனை நதிக்கரையில் வீடுகளைக் கட்டிக் கொண்டு அவற்றில் இருந்தால் இந்தக் கடும் வெப்பத்திலிருந்து தப்பலாமே'' என்றான்.

கிருஷ்ணரும் அதுவும் சரிதான் எனக் கூறி அர்ஜுனனையும் மற்றும் சிலரையும் அழைத்துக் கொண்டு யமுனை நதிக்கரையோரமாக உள்ள காட்டுப் பகுதிக்குச் சென்றார். அங்கு தங்கி இருக்க இடங்களை ஏற்பாடு செய்து கொண்டு யாவரும் சுகமாகக் காலம் கழிக்கலானார்கள். ஒருநாள் அவர்கள் சந்தன மரங்களுள்ள பகுதியில் மர நிழலில் அமர்ந்து கதைகள்



கூறிக் கொண்டு பொழுதைக் கழித்துக் கொண்டிருந் தார்கள்.

அச்சமயத்தில் ஒரு கிழப் பிராம்மணன் அவர்கள் இருக்கும் இடத்திற்கு வந்தான். அவன் உயரமானவன். அவனது உடல் ஒளியை வீசிக் கொண்டிருந்தது. அவன் மரவுரி தரித்திருந்தான். தலை ஒரே சடைகள் நிரம்பி இருந்தது. அவனது மீசை அடர்ந்து வளர்ந்திருந்தது. அவன் அவர்களைப் பார்த்து ''எனக்கு சாப்பிடுவது என்றால் மிகவும் பிடிக்கும். எதையும் ஜீரணிக்கும் சக்தி எனக்கு உண்டு. எனக்குப் பிடித்தமான உணவை நீங்கள் எனக்கு அளித்தால் அதனை உண்டு திருப்தி அடைவேன்'' என்றான்.

அதைக் கேட்டு கிருஷ்ணர் ''பிராம்மணரே! உமக்கு எப்படிப்பட்ட உணவு வேண்டும்? அதைக் கூறுங்கள். நாங்கள் கொடுக்கிறோம்'' என்றார். அந்தப் பிராம்மணனும் ''நான் அக்கினி தேவன். இந்தக் காண்டவ வனத்தை எரிக்க விரும்புகிறேன். எனக்கு இதுதான் உணவு. வேறு எதுவும் வேண்டாம். இதை எரிக்க பல முறை முயன்றேன். ஆனால் இந்திரன் பெரும் மழையைப் பெய்ய வைத்து என் முயற்சியை முறியடித்து வருகிறான். தட்சகன் முதலிய பாம்புகளின் உதவியுடன் இந்த வனத்தைக் காப்பாற்றி வருகிறான். உங்களை போன்றவர்களின் உதவி எனக்கு கிடைத்தால் என் முயற்சியில் நான் வெற்றி பெறமுடியும். அதனால் எனக்கு உதவி புரியுங்கள்'' என்று வேண்டினான்.

அக்கினி தேவன் காண்டவ வனத்தை எரிக்க முயன்றதற்கு காரணம் உண்டு. வெகு காலத்திற்கு முன் சுவேதகன் என்ற மன்னன் ஒருவன் இருந்தான். இவன் தொடர்ந்து யாகங்களைச் செய்து கொண்டே இருந்தான். ஒருமுறை அவன் நெடுநாள் யாகம் ஒன்றைச் செய்தான். இதில் உதவிய புரோகிதர்களுக்கு ஹோமப் புகையினால் கண்களில் நோய் ஏற்பட்டது. அதனால் சுவேதகன் அவர்களுக்கு பதிலாக வேறு புரோகிதர்களை அமர்த்தி யாகத்தைச் செய்து முடித்தான்.

ஆனால் அடுத்த தடவை சுவேதகன்

யாகம் செய்ய விரும்பிய போது அவனுக்கு எந்த பிராம்மணனும் யாகத்தை நடத்திக் கொடுக்கக் கிடைக்கவில்லை. மேலும் அவர்கள் ''உன் யாகத்தைச் செய்ய அந்தப் பரமேஸ்வரன் வந்தால்தான் முடியும்'' என்று கூறினார்கள். சுவேதகனும் கைலாசத்திற்குப் போய் சிவபிரானைக் குறித்து தவம் செய்தான்.

சிவனும் அவன் தவத்திற்கு மகிழ்ந்து அவன் முன் தோன்றவே அவனும் ''தாங்கள் என் யாகத்தை நடத்திக்கொடுக்கவேண்டும்'' என்று வேண்டினான். அவரும் ''நீ பனிரெண்டு ஆண்டுகள் அக்கினியை வேண்டு. அவன் உன் யாகத்தைச் செய்து தருவான்'' என்றார். அப்போதும் சுவேதகன் அவரிடம் வேண்டவே அவரும் ''என் அம்சமான துர்வாசரை அனுப்புகிறேன். அவன் உன் யாகத்தைச் செய்து முடிப்பான்'' என்றார்.

சுவேதகனும் சிவபிரான் அனுப்பிய துர்வாசரைக் கொண்டு யாகத்தைச் செய்து முடித்து அவருக்கு தட்சணை கொடுத்து அனுப்பினான். சுவேதகன் செய்த யாகத்தால் அக்கினி நெய்யைச் சாப்பிட்டு அஜீர்ணத்திற்கு ஆளாகி இளைத்துப் போகலானான். அவன் பிரம்மாவிடம் போய்த் தன் அஜீர்ணத்தைப் போக்கிக் கொள்ள என்ன வழி என்று கேட்டான்.

பிரம்மாவும் ''நீ அளவுக்கு மீறி நெய்யைக் குடித்து அஜீரணத்தை வரவழைத்துக் கொண்டிருக்கிறாய். நீ காண்டவ வனத்தை எரித்தால் உன் அஜீரணம் போய் முன் போலாகி விடுவாய்'' என்றார்.

அக்கினி பிரம்மா கூறியபடி காண்டவ வனத்திற்குப் போய் அதனை எரிக்க முயன்றான். ஆனால் உடனே பெருத்த மழை பிடித்துத் தீயை அணைத்து விட்டது. அதனால் அவன் முயற்சி பலிக்கவில்லை. அவன் ஏழு முறை முயன்று அந்த வனத்தை எரிக்க முயன்றான். ஆனால் முடியாது போகவே மீண்டும் பிரம்மாவிடமே போய் முறையிட்டான்.



# செய்திகளில் சிறுவர்கள்

## பாடநூல்களில் இடம் பெற்றான்

மகான்களின் இளமைப் பருவம் பற்றிப் பாடநூல்களில் கூறப்படுவது சர்வ சாதாரணம். இவை சிறுவர்களுக்கு உணர்வூட்டி அப்பெரியோர்கள் காட்டிய வழியில் செல்ல ஊக்கமளிக்கும். ஆனால் சென்னையில் ஒரு கல்வி நிலையத்தில் படிக்கும் கேரளத்தைச் சேர்ந்த பி. ராஜேஷ் என்னும் பதினோறு வயதுச் சிறுவனைப் பற்றிய விவரங்கள் புகைப் படங்களுடன் ஆறாவது வகுப்பு மலையாளப் பாடப் புத்தகத்தின் இடம் பெற்றுள்ளன. இப் புத்தகம் தமிழ் நாடு பாடநூல் நிறுவனத்தால் வெளியிடப்பட்டுள்ளது. பி. ராஜேஷ் கராத்தே சாம்பியன் சென்ற ஆண்டு கனடாவில் லிட்பிரிட்ஜில் நடந்த பதினைந்து ஆண்களுக்குட்பட்ட சிறுவர்களுக்கான கராத்தே போட்டியில் உலக சாம்பியனாகத் தங்கப் பதக்கம் இவன் பெற்றான். 1993ல் ஜாம்ஷெட்பூரில் நடந்த தேசிய சேம்பியன் போட்டியிலும் 1995ல் ஜபல்பூரில் நடந்த சாம்பியன் ஷிப் போட்டியிலும் தங்கப் பதக்கங்களை வென்றவன். பள்ளியில் சேரு முன்பே அவன் கராத்தே கற்க ஆரம்பித்தான். பள்ளியில் சேர்ந்த பின் பாடங்கள் படிப்பது கெடாத விதமாய் தினமும் நான்கு மணி நேரம் கராத்தே பழகி வந்தான். எட்டாவது வயதில் 'ப்ளாக் பெல்டை' அடைந்து விட்டான். ராஜேஷ் கனடாவிலிருந்து திரும்பி வந்தபோது முதலமைச்சர் அவனை வரவேற்று அவனுக்கு என்ன வேண்டும் என்று கேட்ட போது கராத்தே பயிலப் போதிய இடம் வேண்டுமென்று கேட்டான். இருபது செண்ட் நிலம் கொடுப்பதாக முதலமைச்சர் வாக்களித்தார்.



## ஓவியர் - நடிகர்

கேரளாவைச் சேர்ந்த மற்றொரு மாணவர் நிதீஷ் கே. டேவிட் என்பவனின் வயது பனிரெண்டு. அவனது பெயரை 'கின்னஸ் புக் ஆஃப் ரிகார்ட்'ஸில் சேர்த்தும் கொள்ள சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது. இது வரை அவன் 35,000 படங்களை வரைந்திருக்கிறான். மிகச் சிறு வயதிலிருந்தே பென்சிலால் படங்கள் வரைய ஆரம்பித்தான். பென்சிலிருந்து பேனா, பேனாவிலிருந்து பிரஷ் என்று மாற்றியும் வாடர்கலர், ஆயில் கலர் ஆகியவற்றையும் இவன் பயன்படுத்தி வருகிறான். கம்பூடரைக் கொண்டும் இவன் சில படங்களைத் தயாரித்திருக்கிறான். திரைப் படங்களில் நடிக்க ஆர்வம் கொண்டுள்ள டேவிட் ஒரு மலையாளத் திரைப் படத்தில் நடித்திருக்கிறான். அது விரைவிலேயே திரையிடப்பட உள்ளது.



## பல்முனை மேதை

பெங்களூரின் 'சென்டர் ஸ்டேஜ்' என்ற நிறுவனம் சென்னையிலுள்ள ஒரு பள்ளியின் மாணவரான பதினொன்றாவது வகுப்பு ஆராவமுகன் என்பவருக்கு இந்த ஆண்டின் பல்முனை மேதை என்ற பட்டத்தை வழங்கி அவரது உயர் படிப்பிற்காக ஒரு லட்சம் ரூபாயும் வழங்கியுள்ளது. இவர் பள்ளிப் படிப்பில் முதன்மை பெற்றது போல கட்டுரை, க்விஸ், ஓவியம் வரைதல், மிருதங்கம் வாசிப்பு, சிறப்புத் தேர்வுகள் முதலியவற்றிலும் முதலிடம் பெற்றிருக்கிறார். அதே பள்ளியைச் சேர்ந்த கௌசிக் ஜெயராமன் என்ற ஒன்பதாவது வகுப்பு மாணவனுக்கு 'இவ்வாண்டு மாணவர்' என்ற பட்டத்தை இதே நிறுவனம் அளித்து பத்தாயிரம் ரூபாயும் உயர் படிப்பிற்காக வழங்கியுள்ளது.

**அம்புலிமாமா அனுபந்தம்—86**

**நம் நாட்டு மரங்கள்**

# முள் முருங்கை

இந்த மரம் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் தென்பட்டாலும் குறிப்பாக பீகார், வங்காளம் ஆகிய மாநிலங்களில் மிக அதிகமாகத் தென்படுகிறது. கடற்கரையோரக் காடுகளிலும் இவற்றைப் பெரும் அளவில் காணலாம். தாவர இயலில் இதனை 'எரித்ரினா இண்டிகா' என்று கூறுகிறார்கள். இந்தியாவின் சிவப்பு மலர் மரம் என்பது இதன் பொருள். இதன் மலர்கள் சிவப்பாயும் நீளமாயும் குவிந்து மூடியும் இருக்கும். பெரிய இலைகள் மூன்று கிளை தளங்களாகி இருக்கும். சில பகுதிகளில் இவற்றை பிரம்மா, விஷ்ணு, சிவன் எனக் கருதுகிறார்கள். நம் நாட்டில் சில கிருஸ்துவர்கள் இவற்றை தந்தை, மகன், பரிசுத்த ஆத்மா எனக் கருதுகிறார்கள். இலைகள் ஒன்றுக்கு ஒன்று எதிரும் புதிருமாக இருக்கும்.

அடர்ந்த இலைகளைக் கொண்ட இம்மரம் சுமார் 15 மீட்டர் உயரம் வரை வளரும் பூங்காக்களிலும் சாலைகளின் இரு ஓரங்களிலும் இவற்றை அழகிற்காகவும் நிழலுக்காகவும் வளர்க்கிறார்கள். இம் மரத்தின் வேர்கள் பூமிக்குள் நைட்ரஜன் வாயுவைச் செலுத்தி பூமியை வளமுள்ளதாகச் செய்கின்றன. இதனால் இவற்றை வயலின் நடுவில் கூட நட்டு வளர்க்கிறார்கள்.



கிளைகளில் வளைந்து திரிந்த முட்கள் இருக்கும் பகுதிகளில் கணுக்கள் முண்டு முரடாக இருக்கும். மரம் நன்கு முதிர்ந்து வளர்ந்த பின் முட்கள் இதிலிருந்து உதிர்ந்து விடும். பிப்ரவரி, மார்ச் மாதங்களில் இதன் இலைகள் உதிரும் போது இது மலர்களைக் கொடுக்கிறது. அதன் பிறகு மரம் புதிய துளிர்களை விடத் தொடங்குகிறது.

நம் நாட்டு முனிவர்கள்-10

# கபிலர்

சூரிய வம்ச மன்னன் சகரன் அசுவமேத யாகம் செய்ய எண்ணி யாகக் குதிரையை எல்லா நாடுகளில் திரிந்து வர அனுப்பி னான். அக்குதிரையின் பின்னால் சகரனின் புதல்வர்களான அறுபதினாயிரம்பேர்களும் சென்றார்கள். அக்குதிரை பல நாடுகளில் சென்ற போதிலும் யாரும் அதனை பிடித்துக் கட்டிப் போடவில்லை.

ஆனால் ஒருநாள் திடீரென அக்குதிரை காணாமல் போய்விட்டது. எங்கு தேடியும் அது கிடைக்காததால் சகரனின் புதல்வர்கள் தம் தந்தையிடம் போய் விஷயத்தைக் கூறினார்கள். சகரனும் ''யாகக் குதிரை பூவுலகில் தென்படவில்லை என்றால் அது பாதாளலோகத்தில்தான் இருக்கும். எனவே பூமியைக் குடைந்து பாதாள லோகத்தில் போய்த் தேடிப் பாருங்கள்'' என்றான்.

சகரனின் புதல்வர்களும் பூமியைக் குடைந்து கொண்டு சென்று பாதாள லோகத்தை அடைந்தார்கள். அங்கு ஒளி வீசும் முனிவர் ஒருவர் தவம் செய்து கொண்டிருப்பதைக் கண்டார்கள். அவரருகே அவர்கள் தேடி வந்த யாகக் குதிரை கட்டப்பட்டிருந்தது. முனிவர் தவத்தில் மூழ்கி இருந்ததால் அவர்கள் கேட்ட கேள்விகளுக்கு பதில் கிடைக்க வில்லை. அதனால் அவர்கள் முனிவரைப் பிடித்து உலுக்கிக் கண்டபடி திட்டினார்கள்.

தவம் கலைந்த முனிவர் கோபத்தோடு தம் எதிரில் இருந்தவர்களைப் பார்த்தார். அந்தக் கோபக்கனலில் அவர்கள் எல் லோரும் எரிந்து சாம்பலானார்கள். அக் குதிரையை இந்திரன் திருடிக் கொண்டு அங்கு கட்டியதை சகரனின் புத்திரர்கள் அறிந்திராததால்தான் அவர்கள் முனிவ ரின் கோபத்திற்கு ஆளாகி எரிந்து போனார் கள்.

சகர மன்னனின் கொள்ளுப் பேரனான பகீரதன் விடாமல் தொடர்ந்து தவம் செய்து பெரும் முயற்சியால் கங்கையைப் பூவுலகிற் குக் கொண்டு வந்தான். அதைப் பாதாள லோகத்திற்கும் கொண்டு போய் அந்தப் புனித நீரைத் தன் முன்னோர்களின் சாம்பல் மீது பாயச் செய்து தன் முன்னோர்களுக்கு மோட்சம் கிடைக்கச் செய்தான்.

சகரனின் புதல்வர்களைத் தம் பார்வை யால் எரித்த முனிவர் கபிலர். அவர் பரம விஷ்ணு பக்தர். கர்தம பிரஜாபதியின் புதல்வர். தன் தந்தை இறந்தபின் இவர் தன் தாய்க்கு உபதேசம் செய்து அவளை விஷ்ணு லோகம் அடையச் செய்தார். நமது ஆறு தர்சனங்களில் ஒன்றான சாங்கிய தர்சனத் தின் ஆதிகர்த்தா கபில முனிவர்தான்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. நாஜிஸத்தை யார் தொடங்கினார்?
2. இந்து புராணங்களின் படி முதன் முதலில் இறந்த மனிதன் யார்?
3. பித்தளை எவ்வாறு தயாரிக்கப்படுகிறது?
4. 'தந்தக் கோவில்' எங்குள்ளது?
5. பதிமூன்று தீவுகளைச் சேர்த்துக் கட்டப்பட்ட நகரம் எது?
6. பட்டுப் புழுவிற்கு எத்தனை கண்கள்?
7. பங்களாதேஷில் விரிவாகப் பயிரிடப்படும் பயிர் எது?
8. ஆஸ்திரேலியாவில் தீவாக உள்ள மாநிலம் எது?
9. 'கர்னல்' என அழைக்கப்படும் இந்தியக் கிரிக்கெட் வீரர் யார்?
10. அங்காராவிற்கு முன் துருக்கியின் தலை நகராக எது இருந்தது?
11. நம் தேசியக் கொடியிலுள்ள அசோக சக்கரத்தில் எத்தனை ஆரங்கள் உள்ளன?
12. கிரீஸின் கரன்சியின் பெயர் என்ன?
13. பதேஹ்பூர் சிக்ரியை நிர்மாணித்தவர் யார்?
14. சூயஸ் கால்வாய் எப்போது திறக்கப்பட்டது?
15. ஒருநாள் கிரிக்கெட்டில் இந்தியாவின் தரப்பில் 'சதம்' அடித்த முதலாவது ஆட்டக்காரர் யார்?
16. தொலைக் காட்சியைக் கண்டு பிடித்தவர் யார்?
17. தாற்காலீக இந்தியப் பிரதமராக இருமுறை யார் எப்போது நியமிக்கப்பட்டார்?
18. 'சுமோ' என்ற சண்டைமுறை எந்நாட்டைச் சார்ந்தது?
19. 'ஹார்ஸ் பவர்' என்ற சொல்லை முதலில் பயன் படுத்தியவர் யார்?
20. மிகப்பெரிய தீவு எது?

## விடைகள்

1. அடால்ஃப் ஹிட்லர்.
2. யமன்.
3. தாமிரமும் துத்த நாகமும் கலந்து செய்கிறார்கள்.
4. ஸ்ரீலங்காவில் கண்டியில் புத்தரது பற்கள் பத்திரப்படுத்தி வைக்கப்பட்ட புனித ஆலயம்.
5. ஸ்விடனின் தலைநகர் ஸ்டாக் ஹோம்.
6. எட்டு கண்கள்.
7. சணல்.
8. டாஸ்மேனியா.
9. திலிப் வெங்சர்க்கார், சி.கே. நாயுடு. இந்திய ராணுவத்தில் 'கர்னல்'களாக இருந்தவர்கள்.
10. இஸ்டான் புல்.
11. அறுபத்து நான்கு.
12. டாக்மா.
13. அக்பர் சக்கரவர்த்தி.
14. 1869ல்.
15. கபில் தேவ் (1983)
16. ஜான்லாக் பாய்ர்ட்.
17. குல்ஜாரிலால் நந்தா (1964; 1966)
18. ஜப்பான்.
19. ஜேம்ஸ் வாட்.
20. க்ரீன் லாண்ட்.



# யார் ரசிகன்?

கவிஞர் கரிவரதன் ரசிகப் பிரமுகர்களைக்கண்டு தம் கவிதைகளைக்கூறி அவர்கள் கொடுக்கும் பரிசைப் பெற்று திருப்தி அடைந்து வந்தார். அவருக்குப் பண ஆசை இல்லை.

அவர் நகரில் தர்மசீலன் என்ற வியாபாரிக்குக் கவிதைகளென்றால் பிடிக்கும் என்று கேள்விப்பட்டு அவரைக் காணத் தம் ஊரிலிருந்து கிளம்பிச் சென்றார். கொஞ்ச தூரம் நடந்து போய் இளைப்பாற ஒரு மரத்தடியே அவர் தங்கினார். சற்று நேரம் கழிந்தது. அப்போது அங்கு ஒரு ஏழை மனிதன் வந்தான். அவன் வயலில் வேலை செய்து விட்டுச் சற்று ஓய்வு எடுக்க அந்த மரத்தடியே வந்து சேர்ந்தான்.

அவன் கரிவரதனைப் பார்த்து ''ஐயா! தங்களைப் பார்த்தால் ஒரு கவிஞர் போலத் தெரிகிறது. நான் சொல்வது சரிதானே?'' என்று கேட்டான். கவிஞரும் ஆம் எனவே அந்த ஏழை மனிதனும் ''ஐயா! நான் அதிகமாகப் படித்திராவிட்டாலும் ஓரளவு கவிதைகளை ரசிப்பேன். தாங்கள் என் வாழ்க்கையைப் பற்றி ஒரு கவிதை புனைந்து கூறினால் மிகவும் மகிழ்வேன்'' என்றான்.

கரிவரதன் அப்போது அவனைப் பற்றி விசாரித்தார். வயல் வேலை செய்வதில் ஒருநாளைக்குப் பத்து ரூபாய் கிடைத்து வருகிறதாம். அதைக் கொண்டு குடும்பத்தை நடத்தி வருகிறானாம். அவன் மனைவியும் தின்பண்டங்கள் செய்து விற்கிறாளாம். இப்படியாகக் குடும்பம் சந்தோஷமாகக் காலம் கழிகிறது.

அது கேட்டு கவிஞர் அழகிய கவிதை ஒன்றைப் புனைந்து கூறினார். அது கேட்டு அந்த ஏழை விவசாயி மகிழ்ந்து கவிஞருக்கு ஒரு ரூபாயை தன் மடியிலிருந்து எடுத்துக் கொடுத்து விட்டு மறுபடியும் வயலில் வேலை

—பாபநாசம் சாமா—

செய்யச் சென்று விட்டான். அதை வாங்கிக் கொள்ள அவர் மறுத்தும் கேளாமல் பணத்தை அவரிடம் திணித்து விட்டே சென்றான்.

கவிஞர் அந்தப் பணத்தைப் பையில் போட்டுக் கொண்டு அங்கிருந்து கிளம்பினார். அவர் பாதையில் நடந்து கொண்டு போகையில் அரச குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் வண்டியில் போய்க் கொண்டிருந்தார். அவர் கவிஞரைப் பார்த்து வண்டியை நிறுத்தி இறங்கி வந்து ''தங்களைப் பார்த்தால் ஒரு கவிஞர் போலத் தெரிகிறது. நீங்கள் ஏன் நடந்து செல்ல வேண்டும்? என் வண்டியில் ஏறிக் கொள்ளுங்கள்'' என்றார்.

கவிஞரும் வண்டியில் ஏறிக் கொண்டார். அவருடன் பேசியதில் கவிஞருக்கு அவரும் கவிதையை ரசிப்பவர் என்று தெரிந்தது. அவரும் தம்மைப் பற்றி ஒரு கவிதை எழுதும் படி வேண்டவே கவிஞரும் அவருடைய குடும்பத்தைப் பற்றி அறிந்தார்.

அவர் பெயர் ஹேம சந்திரன். அவரை அரசர் மிகவும் விரும்புகிறார். அரசர் அவருக்கு ஒரு மாதத்திற்கு நாற்பதாயிரம் ரூபாய் கொடுக்கிறாராம். அடிக்கடி பயணம் செய்வதால் அவர் தம் மனைவியை விட்டுப் பிரிந்திருக்க வேண்டி இருக்கிறதாம்.

கவிஞர் அதை எல்லாம் கேட்டு விட்டு கணவனை விட்டுப் பிரிந்த மனைவி வாடுவதையும் கணவனும் மனைவியின் பிரிவைத் தாங்க முடியாமல் போவதையும் தம் கவிதையில்





புகுத்தி அவருக்குத் தாம் புனைந்த தைக் கூறினார். அதைக்கேட்ட ஹேம சந்திரன் தன் வீட்டிலேயே இருப்பது போல உணர்ந்தார்.

சற்று நேரத்தில் அந்த வண்டி நகரை அடைந்தது. ஹேம சந்திரன் கவிஞருக்கு ஐநூறு ரூபாயைக் கொடுத்து ''கவிஞரே! இதை உங்களது கவிதையின் விலை என்று எண்ணிவிட வேண்டாம். இது என் சக்திக்கான அன்புக் காணிக்கை. இதை ஏற்று என்னை மகிழச் செய்ய வேண்டும்'' என்று வேண்டினார்.

கவிஞர் அந்தப் பணத்தை வாங்கிக் கொண்டு வண்டியிலிருந்து இறங்கினார். அவர் தர்மசீலரின் வீடு எங்கே இருக்கிறது என்று பலரிடம் விசாரித்து முடிவில் அந்த வீட்டை அடைந்தார்.

அப்போது தர்மசீலரின் மனைவி மகா லட்சுமி ஓடி வந்து அவரை வணங்கி ''தங்களைப் பார்த்தால் கவிஞர் போலத் தெரிகிறதே. நான் நினைத்தது சரிதானே?'' என்று கேட்டாள். கவிஞரும் ஆமெனக் கூறவே அவளும் தன் கணவனைப் பற்றிக் கூறினாள். அவர் பல வியாபாரங்கள் செய்து வருகிறாராம். தினமும் குறைந்த பட்சம் பத்தாயிரம் ரூபாயாவது லாபம் கிடைக்கிறதாம். சில நாட்களில் ஐம்பதாயிரத்திற்கு மேலாகவும் கிடைக்கிறதாம்.

தர்மசீலர் இப்படி வேலைகளில் மூழ்கி இருந்தாலும் யாராவது கவிஞர் வந்திருக்கிறார் என்று அறிந்தால் உடனே எல்லா வேலைகளையும் விட்டுவிட்டு அக் கவிஞரைச் சந்திக்க ஓடி வந்து விடுவார் என்று கூறி மகாலட்சுமி உடனே ஆளை அனுப்பி வீட்டிற்கு ஒரு கவிஞர் வந்திருப்பதாகச் செய்தி கூறச் சொன்னாள். கவிஞரை அவள் தக்கபடி உபசரித்து மரியாதை செய்தாள்.

சற்று நேரத்தில் தர்மசீலர் வந்து சேர்ந்தார். அது மத்தியான வேளை. எல்லோருக்கும் குடிக்கக் குளிர்ந்த பானம் கொடுக்கப்பட்டது. தர்மசீலரும் கவிஞரிடம் ''நீங்கள் புதிதாகக் கவிதை புனைந்திருந்தாலும் சரி அல்லது தங்களது காவியங்களிலிலிருந்தாலும் சரி கவிதைகள் கூறுங்கள்'' என்று வேண்டினார்.

கவிஞர் தாம் புனைந்த கவிதைகளை எல்லாம் கூறினார். தர்மசீலர் மெய் மறந்து போனார். அவற்றையெல்லாம் நன்கு ரசித்தார். அவ்வீட்டிலிருந்தவர்களெல்லாம் வந்து உட்கார்ந்து கவிஞரின் கவிதைகளைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். எல்லோருக்கும் தின்பண்டங்கள் வழங்கப்பட்டன.

கவிஞர் மாலையாகி இருட்டிய பிறகும் கூடத் தம் கவிதைகளைக் கூறிக் கொண்டிருந்தார். அதன் பிறகு யாவருக்கும் உணவு அளிக்கப்பட்டது. சாப்பிடும் போது கூட தர்மசீலர் கவிதை பற்றிக் கவிஞரிடம் பேசிக் கொண்டிருந்தார். தமக்கு ஏற்பட்ட பல சந்தேகங்களைக் கவிஞரிடம் கேட்டுத் தீர்த்துக் கொண்டார்.

தர்மசீலர் கவிஞருக்கு ஐயாயிரம் ரூபாய்கள் கொடுத்து ''கவிதைக்கு விலை என்பது ஏது? என்னாலான இந்த அற்பக் காணிக்கையை சமர்ப்பித்துள்ளேன். ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று வேண்டினார். மகாலட்சுமியும் ''இன்று பகல் முழுவதும் கவிதைகளால் என் கணவரை வீட்டை விட்டு அசையாமல் கட்டிப் போட்டீர்களே அதற்கு மிக்க நன்றி'' என்றாள்.

அன்றிரவு கவிஞர் அங்கேயே தங்க ஏற்பாடு செய்யப்பட்டது. தர்மசீலர் கவிஞரிடம் ''நீங்கள் நிம்மதியாகப் படுத்து உறங்குங்கள். நாளை சாவகாசமாக நீங்கள் கிளம்பிச் செல்லலாம். ஒருவேளை நீங்கள் நாளை காலையில் கிளம்பும் போது நான் வீட்டில்



இல்லாது போனாலும் போகலாம். அதனால் இப்போதே விடைபெற்றுக் கொள்கிறேன்'' என்று கூறி விடை பெற்றுக் கொண்டார்.

மறுநாள் காலையில் கவிஞர் எழுந்த போது தர்மசீலர் வீட்டில் இருக்க வில்லை கிளம்பிய போய் விட்டார். கவிஞரும் மகாலட்சுமி யிடமும் மற்றவர்களிடமும் விடை பெற்றுக் கொண்டுத் தம் ஊருக்குச் சென்றார். அவர் தம் மனைவியிடம் நடந்ததை எல்லாம் கூறி தர்மசீலரை வெகுவாகப் புகழ்லானார்.

அவரது மனைவியோ ''தர்மசீலர் உங்களுக்கு ஐயாயிரம் ரூபாய் கொடுத்து விட்டார் என்பதற்காக அவரைப் புகழ்கிறீர்களா? அவர் சம்பாதிப்பதைக் கொண்டு பார்த்தால் இது அவருக்கு தூசிக்கு சமானம். ஹேமசந்திரன் தன் ஒருநாள் சம்பாதிப் பதில் பாதியைக் கொடுத்தார். ஏழை விவசாயியோ ஒருநாள் கூலியை உங்களிடம் கொடுத்து விட்டான். எனவே நீங்கள் அந்த ஏழைக் குடி யானவனைத்தான் பாராட்ட வேண் டும்'' என்றாள்.

கவிஞரோ பலமாக சிரித்து ''அட பைத்தியமே! எனக்கு பணத்தாசையே இல்லை, மனிதர்களின் மதிப்பை நான் பணத்தைக் கொண்டு போடுவ தில்லை. ஏழை விவசாயி தான் ஓய்வு எடுக்கும் வேளையில் என் கவிதை யைக் கேட்டான். ஹேமசந்திரனோ தான் பயணம் செய்தபோது வண்டியி லிருந்தவாறே கேட்டார். ஆனால் தர்மசீலரோ தன் வேலைகளையும் சம்பாத்தியத்தையும் விட்டு விட்டு என் கவிதைகளைக் கேட்க ஓடோடி வந்தார். அவர் பகல் முழுவதுமாயும் இரவும் இருந்து கவிதைகளைக் கேட் டும் அது பற்றிப் பேசிக் கொண்டும் இருந்தார். இவர்களில் கவிதைக்காக அதிக நேரம் ஒதுக்கியவர் தர்மசீலரே. அதனால்தான் நான் அவரை மிகவும் புகழ்கிறேன்'' என்றார். அப்போது தான் அவரது மனைவிக்கு உண்மை யில் கவிதையை ரசிப்பவர் யார் என் பது நன்கு விளங்கியது.






# அவன் தந்த பரிசு!

ஒரு சிறிய நாட்டு மன்னனின் மகள் மணிமாலா. அந்த மன்னனிடம் பணம் அதிகம் இல்லை. அதனால் தன் அழகான மகளுக்கு அவனாகவே ஒரு அரச குமாரனைத் தேர்ந்தெடுத்து மணம் செய்து வைக்க முடியவில்லை. அதனால் அவளுக்கு சுயம் வரம் நடத்தி அரசகுமாரர்கள் அளிக்கும் பரிசுகளைக் கொண்டு விவாகத்தை நடத்தி விடுவது என்று அவன் தீர்மானித்தான்.

மணிமாலாவின் சுயம் வரத்திற்கு அரசகுமாரர்களுக்கு அழைப்புகள் அனுப்பப்பட்டன. அரசகுமாரர் களும் மணிமாலாவின் சுயம்வரத் திற்கு வந்து சேர்ந்தனர். அவ்வாறு வந்தவர்களுள் பலவீரன் என்ற அரச குமாரன் மிகுந்த ஆர்ப்பாட்டத்தோ டும் படாடோபத்தோடும் வந்தான். பலவீரனின் தந்தை பாணவீரன். அவன் மிகவும் கொடுமைக்காரன். பல அரசர்களுக்குத் தொல்லை கொடுத்துக் கொண்டும் இருந்தான்.

பாணவீரனின் தொல்லைகளைப் பொறுக்க முடியாமல் பத்து அரசர்கள் ஓரிடத்தில் கூடி அவனை அடக்க என்ன செய்யலாமென யோசித்தனர். அதை அறிந்த பாணவீரன் அவர் களைத் தாக்கிப் பிடித்து வைத்துப் பெரும் பணம் பெற்ற பின்னரே விடு தலை செய்து அனுப்பினான்.

மணிமாலாவின் சுயம் வரத்திற்கு பலவீரன் வந்த அதே நேரத்தில் சத்திய சீலன் என்ற அரசகுமாரனும் வந்தான். அவன் ஏறி வந்த குதிரை கிழடு தட்டி, அவன் அணிந்திருந்த கவசம் பல இடங்களில் அதுங்கி அவன் மிகவும் ஏழையானவன் என எடுத்துக்காட்டிக் கொண்டிருந்தது. பாணவீரனிடம் அகப்பட்டு பெரிய தொகை கொடுத்து விடுதலையான அரசர்களில் சத்திய சீலனின் தந்தையும் ஒருவன். அதனால்

—சங்கர சுவாமிநாதன்—




தான் சத்தியசீலன் அந்த நிலைக்குத் தள்ளப்பட்டான்.

சுயம்வரத்திற்கு முன் அரசகுமாரர்கள் தங்கள் பலபராக்கிரமத்தைக் காட்ட வேண்டும். இதற்காக ஒரு மைதானம் குறிப்பிடப்பட்டது. அப்போட்டியைக் காண மணிமாலாவும் அரசகுடும்பத்தினரும் மற்றும் பலரும் அங்கு வந்தார்கள். அரசகுமாரர்களில் பலவீரன்தான் பளிச்செனத் தென்பட்டான். எல்லாப் போட்டிகளிலும் தன் திறமையைக் காட்டினான். சத்தியசீலனும் அவனுக்குக் குறைந்து போய் விடவில்லை அவன் பலவீரனை விடப் பலரை வென்றான். ஆனால் பலவீரனுடன் அவன் மோதிய போது அவனது குதிரை மிகவும் களைத்துப் போனதால் அவன் தோற்றுப் போக வேண்டியதாயிற்று.

அன்றைய பகல் கழிந்து இருட்டும் போது யாவரும் தர்பார் மண்டபத்தின் வந்து கூடினார்கள். அரசகுமாரர்கள் ஒவ்வொருவராக மணிமாலாவின் அருகே போய் தாம் கொண்டு வந்த பரிசுகளை அளித்தார்கள். பலரும் பல விலையுயர்ந்த பொருள்களைப் பரிசாக அளித்தனர். பலவீரன் கொடுத்த பரிசுதான் மிக விலையுயர்ந்தது. எல்லோருக்கும் கடைசியில் வந்த சத்தியசீலன் தன் வாளை எடுத்து மணிமாலாவின் முன் வைத்து ''என் உயரிய பரிசு இதுதான்'' என்று கூறினான்.

அப்போது பலவீரன் ''அதன் மகிமை என்ன? அது உன் கையில் இருந்தும் நீ சற்று முன் என்னிடம் தோற்கவில்லையா?'' என்று எகத்தாளமாக கூறினான். அப்போது சத்தியசீலன் ''நம் இருவரிடையே சம நிலையில் போட்டி நடக்கவில்லை. அப்படி நடந்திருந்தால் இதன் மகிமை தெரிந்திருக்கும்'' என்றான்.

மறுநாள் அரசகுமாரர்கள் காட்டிற்குப்போய் வேட்டையாடி வரவேண்டும் யாவரும் தம் குதிரைகளின் மீது அமர்ந்து காட்டிற்குச் சென்றார்கள். சத்தியசீலனும் தன் குதிரை மீது அமர்ந்து சென்றான். ஆனால் அதற்கு அவன் சிரமம் கொடுக்க விரும்பவில்லை. அதனால் அது எல்லோருக்கும் பின்னால் மெதுவாகப் போய்க்

கொண்டிருந்தது.

மணிமாலாவும் வேட்டைக்காகக் காட்டிற்குக் கிளம்பினாள். ஆனால் கொஞ்ச தூரம் போனதும் வேட்டை யாட மனமில்லாமல் அரண்மனைக் குத் திரும்பி வரலானாள். அப்போது தான் சத்தியசீலன் அவளெதிரே மெது வாக வந்து கொண்டிருந்தான். அவனைக் கண்ட மணிமாலா ''ஏன்! வேட்டையாட விருப்பம் இல் லையா?'' என்று கேட்டாள்.

அவனும் ''எனக்கு விருப்பமே. ஆனால் என் குதிரை கிழடு தட்டியது. மிகவும் களைத்தும் போயிருக்கிறது. எனக்காகப் பல ஆண்டுகள் உழைத்த இதனைச் சிரமப்படுத்த விரும்ப வில்லை'' என்றான். அப்போது அவள் ''ஓஹோ! உங்களிடம் நல்ல குதிரை இல்லாததால் வேட்டையாட மெதுவாகப் போகிறீர்களா? உங்கள் குதிரையை எனக்குக் கொடுத்து விட்டு என் குதிரை மீது அமர்ந்து செல்லுங்கள்'' என்றாள்.

சத்தியசீலனோ ''என் குதிரை எனக்கு மிக விலையுயர்ந்தது. இவ் வளவு நாட்களாக எனக்குப் பணி புரிந்த இதை நான் வேறு யாருக்கும் கொடுக்க மாட்டேன்'' என்றான். மனிமாலாவும் ''நீங்கள் உங்கள் வாளைப் பரிசாக கொடுத்த போது அதுதான் உங்களது விலையுயர்ந்த பொருள் என்றீர்களே. அப்படி யானால் அது பொய்யா?'' என்று கேட்டவாறே தன் குதிரையை ஓட்டிக் கொண்டு சென்று விட்டாள்.

சுயம் வரத்திற்கான ஏற்பாடுகள்





செய்யப்பட்டன. மணிமாலா தன் முடிவை இன்னமும் ஒரு மாதம் கழித்துக் கூறுவதாக அறிவித்தாள். அரசகுமாரர்கள் தம் நாடுகளுக்குத் திரும்பிச் சென்றார்கள். சத்திய சீலனைத் தவிர மற்றவர்களுக்கு எல்லாம் அவள் விடை கொடுத்து அனுப்பினாள். அவள் சத்தியசீலனைப் பார்க்கக் கூடவில்லை. அது பற்றி அவன் வருத்தப் பட்டவாறே அந்நகர எல்லைக்கு வந்து விட்டான்.

அங்கு அவன் ஒரு மாடு மேய்க்கும் சிறுவனைப் பார்த்தான். அவனைத் தன்னருகே அழைத்து ''தம்பி! நீ இப்போது பார்க்கப் போவதை உன் அரசகுமாரியிடம் சொல்'' எனக் கூறித் தன் வாளை உருவித் தன் குதிரையை வெட்டி ''உன்னை மணிமாலாவிற்காக பலி இட்டு விட்டேன்'' என்று கூறிவிட்டு அங்கிருந்து சென்று விட்டான்.

இதற்கு ஒரு வாரத்திற்குப் பிறகு சத்தியசீலனின் மாளிகை வாசலில் ஒரு உயர் ரகக் குதிரை கட்டப்பட்டிருந்தது. அதில் கழுத்தில் ஒரு வில்லையில் எதையும் சரிப்படுத்தி விடலாம் என்று எழுதப்பட்டிருந்தது. அக்குதிரை மணிமாலாவால் அனுப்பப்பட்டது என அவன் புரிந்து கொண்டான்.

ஒரு மாதமாயிற்று. மணிமாலாவின் முடிவு என்ன என்பதை அறிய அரசகுமாரர்கள் அவளது ஊருக்கு வந்தார்கள். அவள் பலவீரனைத்தான் தேர்ந்தெடுத்து மணப்பாள் என எல்லோரும் உறுதியாக நம்பினார்கள். ஆனால் அவளோ தான் சத்தியசீலனைத் தேர்ந்தெடுப்பதாக யாவர் முன்பும் அறிவித்தாள். அது கேட்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். பலவீரனுக்கோ கோபம் கோபமாக வந்தது.

பலவீரன் சத்தியசீலனைத் தன்னோடு போர் புரிய வருமாறு சவால் விட்டான். சத்தியசீலனோ ''இன்று நாம் காட்டில் வேட்டையாடப் போவோம். நாளை நம் போட்டியை வைத்துக் கொள்வோம்'' என்றான். எல்லோரும் அதுவே சரி எனக் கூறிக் காட்டில் வேட்டையாடச் சென்றார்கள். பகல் முழுவதும் வேட்டையாடி மாலையானதும் அவர்கள் தாம்

வேட்டையாடிக் கொன்ற மிருகங்களோடு திரும்பி வந்தார்கள்.

சத்தியசீலன் மட்டும் வராததால் எல்லோரும் சற்றுக்காத்துப் பார்த்தார்கள். அவன் வரத் தாமதமாகவே எல்லோரும் சாப்பிடப் போக எழுந்தார்கள். அப்போது அவன் வந்து சேர்ந்தான். அவன் எந்த மிருகத்தையும் கொன்று எடுத்து வரவில்லை. அது கண்டு பலவீரன் ''இவ்வளவு நேரமானதால் நீ எவ்வளவோ மிருகங்களைக் கொன்று எடுத்து வருவாய் என்று எதிர் பார்த்தோம்'' என்று கேலி செய்தான்.

சத்தியசீலனும் ''எனக்குப் பல மிருகங்கள் கிடைக்கவில்லை. ஒரே ஒரு மிருகம்தான் கிடைத்தது. அதன் தலையை வெட்டிக் கொண்டு வந்திருக்கிறேன்'' என்று கூறி தான் மறைத்து எடுத்து வந்த தலையை எடுத்து வைத்தான். அது ஒரு மனிதனின் தலை. அதுவும் பலவீரனின் தந்தையான பாணவீரனின் தலை.

அதைக் கண்டு எல்லோரும் திகைத்து வாய் பேச முடியாமல் நின்றனர். ஆனால் எல்லோர் மனமும் ''ஒழிந்தானா பாவி!'' என்றே சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தது. பலவீரன் ஆடிப் போய் விட்டான். அவன் கொட்டம் அடங்கியது. அது வரை தன் தந்தை பாண வீரன் இருக்கிறானே என்ற கர்வத்தில் துள்ளிக் கொண்டிருந்தான். இனி முடியாதே.

எல்லோருமே சத்தியசீலனை மரியாதையுடன் பார்த்தார்கள். பலவீரனையும் பார்த்தார்கள். அவனோ தலை குனிந்து யோசனையில் ஆழ்ந்திருந்தான். சத்தியசீலனுடன் போட்டியிட்டு சண்டை போட அவனுக்குத் துணிவு வரவில்லை. எதுவும் பேசாமல் அங்கிருந்து சென்று விட்டான். அவன் பிறகு எங்கும் தலை காட்டவில்லை.

மணிமாலாவுக்கும் சத்தியசீலனுக்கும் விமரிசையாக திருமணம் நடந்தது. எல்லா அரசகுமாரர்களும் திருமணத்தில் கலந்து கொண்டு அவர்களை வாழ்த்து விட்டுச்சென்றார்கள்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1996 மார்ச் மாத இதழில் வெளியிடப்படும்.



S.G. Shesagiri



S.G. Shesagiri

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஜனவரி 20–ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/–பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–*600 026.*

---

## நவம்பர் மாதப் போட்டி முடிவு

| | | |
|---|---|---|
| *முதலாவது போட்டோ* | : | **தலையானாலும் சுமை காணலாம்.** |
| *இரண்டாவது போட்டோ* | : | **சுமையானாலும் தலை காணலாம்.** |
| *பரிசு பெற்றவர்* | : | **ஏ.ஜி. வெங்கடேஸ்வரன், ஆண்டிமடம், திருச்சி மாவட்டம்.** |




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

